# வீரபாண்டியன்
# தமிழ் வாசகம்



ஐந்தாம் வகுப்பு

ஆசிரியர்: இராசாம்பாள் கோவிந்தராசன், M.A., L.T.

பதிப்பாசிரியர்கள்: மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை,
த. சே. உமாபதி, M.A., L.T.






...பஷன் பப்ளிஷிங் ஹௌஸ்
சென்னை. 1

வீரபாண்டியன்

# தமிழ் வாசகம்




(ஐந்தாம் புத்தகம்)


ஆசிரியர் :

இராசாம்பாள் கோவிந்தராசன், M. A., L. T.

தலைமை ஆசிரியை, லேடி. எம். ஸி. டி. பெண்கள்
உயர்நிலைப் பள்ளி, சென்னை.

பதிப்பாசிரியர்கள் :

வித்துவான் :

மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை

த. சே. உமாபதி, M. A., L. T.



அஸோஸியேஷன் பப்ளிஷிங் ஹௌஸ்

94-95, புதுத்தெரு, மண்ணடி, சென்னை—1.

காபிரைட்டு] 1952 [விலை 0-10-0

# முன்னுரை

'**வீரபாண்டியன் தமிழ் வாசகம்**' என்னும் மகுடம் புனைந்த வாசக வரிசையில் இது **ஐந்தாம் புத்தகம்**. இது ஆரம்பப் பாட சாலைகளுக்கு அரசியலார் வெளியிட்டுள்ள பாடத்திட்டத்தை முற்றிலும் தழுவி ஆக்கப் பெற்றுள்ளது.

இதில் பாடத்திட்டத்திற் குறிக்கப் பெற்றுள்ளபடி சுமார் 800 புதிய சொற்களைப் புகுத்தி எளிய இனிய நடையில் பாடங்கள் அமைக்கப் பெற்றுள்ளன. பாடங்கள் பலவகைப் பட்டவையாயினும், தமிழ் இலக்கியம், தமிழ்ப் புலவர் சம்பந்தமான பாடங்கள் சற்று அதிகமாகவே சேர்க்கப் பெற்றுள்ளன. குழந்தையுள்ளத்திற் பதியத்தக்க பாட்டுகள் பல இதன்கண் இடம் பெற்றுள்ளன. குழந்தைகள் மிக விரும்பும் சித்திரங்கட்குக் குறைவில்லை. மொழிப் பயிற்சிக்குரிய பலவகைப் பயிற்சிகள் தரப்பட்டுள்ளன. ஆனால், இவை மாதிரிகளேயன்றி, முடிவானவையன்று.

சுருங்கக் கூற வேண்டுமாயின், இந்நூலின்கண் இடம் பெற்றுள்ள படங்களும், பாடங்களும், பாட்டுக்களும், பயிற்சிகளும் இளைஞர் உள்ளத்தில் இன்பமூட்டித் தமிழ் மொழியைக் குறைந்த கால அளவில் சிறந்த முறையில் கற்கத் துணை புரியுமென்பது ஒருதலை.

இந்நூலை எழுதுமாறு என்னை ஊக்குவித்த சென்னை **அஸோஸியேஷன் பப்ளிஷிங் ஹௌஸாருக்கும்**, இந்நூல், அச்சாகுங்கால் மேற்பார்வை செய்து வேண்டிய திருத்தங்களைச் செய்து உதவிய மதிப்புக்குரிய நண்பர்கள் **திருவாளர், வித்துவான்-மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை** அவர்கட்கும், **திருவாளர், த. சே. உமாபதி** அவர்கட்கும் எனது உளமார்ந்த நன்றி உரியதாகும்!

அறிஞர் உலகம் இதனை அன்புடன் ஏற்று ஆதரவு நல்கும் என்பது எனது நம்பிக்கை.

சென்னை : 5–11–'52

**இராசாம்பாள் கோவிந்தராசன்.**

# பொருளடக்கம்


| எண் | பொருள் | | பக்கம் |
|---|---|---|---|
| 1. | தமிழ் நாடு. | ... | 1 |
| 2. | தமிழகம் | ... | 3 |
| 3. | தமிழ்மொழி. | ... | 8 |
| 4. | தமிழ்மொழி | ... | 9 |
| 5. | நாட்டுக்கு உழைத்த நற்குடும்பம் | ... | 14 |
| 6. | நீலகிரி | ... | 19 |
| 7. | ஔவையார் (நாடகக்காட்சி) | ... | 24 |
| 8. | மழை | ... | 36 |
| 9. | கதைப்படம் | ... | 37 |
| 10. | செய்தித்தாள்கள் (உரையாடல்) | ... | 38 |
| 11. | பத்திரிகைச்செய்தி—I | ... | 43 |
| 12. | மகாபாரதம் | ... | 46 |
| 13. | திரு. வி. கலியாணசுந்தரனார் | ... | 51 |
| 14. | கிராமமும் நகரமும் | ... | 56 |
| 15. | கதைப்படம் | ... | 63 |
| 16. | ஒட்டக்கூத்தரும் புகழேந்தியாரும் | ... | 64 |
| 17. | கதை எழுதுவது எப்படி? (உரையாடல்) | ... | 70 |
| 18. | பொங்கல் விழா | ... | 74 |
| 19. | தைப்பொங்கல் | .... | 79 |
| 20. | கடிதம் எழுதுவது எப்படி? (உரையாடல்) | ... | 81 |
| 21. | மாதிரிக் கடிதங்கள் | ... | 85 |
| 22. | பரமார்த்த குருவும் சீடர்களும் | ... | 88 |
| 23. | பத்திரிகைச்செய்தி.—II | ... | 93 |
| 24. | கட்டுரை வரைவது எப்படி? (உரையாடல்) | ... | 97 |
| 25. | கைத்திறன் | ... | 100 |
| 26. | இராசராசன் | .... | 102 |
| 27. | கதைப்படம் | ... | 108 |
| 28. | பள்ளி நூல் நிலையம் | ... | 109 |
| 29. | நூல் நிலையமும் படிப்பகமும் | ... | 113 |
| 30. | தமிழுக்குத் தொண்டாற்றிய கிறிஸ்தவர் இருவர் | ... | 114 |
| 31. | செவ்விந்தியர் | ... | 120 |
| | செய்யுட் பாடம் | ... | 125 |
| | I. நீதி | ... | 125 |
| | II. சதகத்திரட்டு | .... | 130 |
| | III. பல்சுவைப் பாடல்கள் | ... | 132 |
| | IV. கதைப் பகுதி | ... | 137 |
| | இந்நூலில் வந்துள்ள புதிய சொற்கள் | | |

# 1. தமிழ் நாடு

(பாட்டு)

நீலத் திரைக்கட லோரத்திலே—நின்று
நித்தம் தவம்செய் குமரியெல்லை—வட
மாலவன் குன்றம் இவற்றிடையே—புகழ்
மண்டிக் கிடக்கும் தமிழ்நாடு ! 1

கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு—நல்ல
பல்வித மாயின சாத்திரத்தின்—மணம்
பாரெங்கும் வீசும் தமிழ்நாடு ! 2

வள்ளுவன் தன்னை உலகினுக்கே—தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு—நெஞ்சை
அள்ளும் சிலப்பதி காரமென் றோர்மணி
ஆரம் படைத்த தமிழ்நாடு ! 3

விண்ணை யிடிக்கும் தலையிமயம்—எனும்
வெற்பை யடிக்கும் திறனுடையார்—சமர்
பண்ணிக் கலிங்கத் திருள்கெடுத்தார்—தமிழ்ப்
பார்த்திவர் நின்ற தமிழ்நாடு ! 4

— பாரதியார்

## 2. தமிழகம்

1. நமது தாய்மொழி **தமிழ்**. இது உலகில் வழங்கி வரும் தொன்மையான மொழிகளுள் ஒன்று. இது வழங்கி வந்த நிலப்பரப்பே **தமிழகம்**. பண்டைக் காலத்தில் வடக்கில் **வேங்கடமலையும்**, தெற்கில் **குமரி முனையும்**, மேற்கில் **அரபிக் கடலும்**, கிழக்கில் **வங்காளக் குடாக்கடலும்** தமிழகத்தின் எல்லைகளாய் அமைந்திருந்தன.

2. முற்காலத்தில் தமிழகத்தில் மூன்று பேரரசுகளும், சில சிற்றரசுகளும் இடம்பெற்றிருந்தன. **சேர நாடு, சோழ நாடு, பாண்டி நாடு** என்பன அம்முப்பேரரசுகளாம். இக்காலத்தில் **திருவாங்கூர், கொச்சி** என வழங்கும் அரசுகளும், **மலையாளம், கோயமுத்தூர், சேலம்** என்னும் மாவட்டங்களும் கொண்ட நிலப் பரப்பே அக்காலத்தில் சேரநாடு எனப்பட்டது. இதன் பெரும்பகுதி மலை நாடு. ஆதலால், சேரநாடு மலைநாடு என்று வழங்கியது. அம்மலைகளில் அடர்ந்த காடுகள் உண்டு. அவற்றில் வேழங்கள் மிகுதி. இது காரணமாகவே '**வேழமுடைத்து மலைநாடு**' என்னும் வழக்குப் பிறந்தது. தேனும், தினையும், சந்தனமும், அகிலும் இந்நாட்டிற்கிடைத்த அரிய பொருள்கள். **வஞ்சி மாநகரம்** என்பது சேர நாட்டின் தலைநகரமாய் விளங்கியது. **தொண்டி, முசிறி** என்பன துறைமுகங்களாய் விளங்கின.

3. சேர நாட்டை ஆண்ட மன்னர் பலர். அவர்களுள் சீரும் சிறப்பும் வாய்ந்தவர் **சேரன் செங்குட்டுவனும், பெருஞ்சோற்றுதியன்**

நெடுஞ்சேரலாதனும் ஆவர். தமிழ் மொழியில் வழங்கும் சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணி-மேகலை, வளையாபதி, குண்டலகேசி என்னும் ஐம் பெருங்காவியங்களுள் சிலப்பதிகாரத்தை இயற்றி-யவர் **இளங்கோவடிகள்** என்பவர். அவர் சேரன் செங்குட்டுவனுக்குத் தம்பியாராவர். **பாண்டவர்** ஐவரும், **கௌரவர்** நூற்றுவரும் போர் புரிந்த போது, அவர்களுடைய படைகளுக்குச் சோறு வழங்கினான் நெடுஞ்சேரலாதன். ஆதலால், அவன் '**பெருஞ்சோற்று உதியன்**' என்னும் சிறப்புப் பெயரைப் பெற்றான். சேர மன்னர்கள் **வில்லும் அம்பும் பொறித்த கொடியையும், பனந்தோட்டு மாலையையும்** தங்கள் தனிச் சின்னங்களாகக் கொண்டார்கள்.

4. இக்காலத்தில் **தஞ்சை, திருச்சி** என் வழங்கும் மாவட்டங்களைக் கொண்ட நிலப்பரப்பே அக்காலத்தில் **சோழ நாடு** எனப் பெயர் பெற்றது. இதிற் **காவிரி யாறு** பாய்வதால் இது நில வளமும், நீர்வளமும் பெற்றுச் 'சோற்றால் மடையடைக்கும் சோணாடு; சோழ நன்னாடு சோறுடைத்து,' என்று சிறப்பிக்கப்பட்டு வந்தது.

5. சோழ மன்னர்கள் முதன்முதல் **உறை-யூரைத்** தங்கள் கோநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தார்கள். பின்னர்க் **காவிரிப்பூம்பட்டினம்** தலைநகராயும் கடற்றுறையாயும் விளங்கியது. அதன் பின்னர்த் **தஞ்சாவூர், கங்கைகொண்ட சோழ-புரம், திருவாரூர்** என்பவையும் வெவ்வேறு காலங்-களில் சோழநாட்டின் தலைநகரங்களாய் விளங்கின.

6. சோழ மன்னருள் பேரும் புகழும் பெற்று விளங்கியவர் சிலர். அவர்களுள் **கரிகாற்சோழன், இராசராசன்** என்பவர் முதலிடம் பெறத் தக்கவர். கரிகாற்சோழன் காலத்தில் காவிரிப்பூம்பட்டினமும், இராசராசன் காலத்தில் தஞ்சாவூரும் ஈடும் எடுப்பு-மற்ற எழில்மிக்க நகரங்களாய் விளங்கின. காவிரிப்-பூம்பட்டினம், இக்காலத்தில் ஒரு சிற்றூராய்க் காட்சியளிக்கிறது. இராசராசனுல் எடுப்பிக்கப்-பட்ட **பிரகதீச்சுரர்** ஆலயம், இன்றும் தஞ்சாவூரில் சோழ மன்னரின் புகழுக்குரிய சின்னமாய் விளங்கி வருகிறது. **ஆத்திப்பூமாலை**யையும், **புலி** பொறித்த **கொடி**யையும் சோழ மன்னர்கள் தங்கள் தனிச் சின்னங்களாய்க் கொண்டார்கள்.

7. இக்காலத்தில் **மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி** என வழங்கும் மாவட்டங்கள் அமைந்த நிலப்பரப்பே அக்காலத்தில் பாண்டி நாடென வழங்கியது. இது **வைகை, தாமிரவர்ணி** என்னும் யாறுகள் பாயும் வாய்ப்பினை உடையது. வைகையாற்றங்கரையில் அமைந்துள்ள **மதுரை மாநகரம்**, பாண்டி நாட்டின் தலை நகரமாயும், **கொற்கை, காயல்** என்பவை கடற்றுறைப் பட்டி-னங்களாயும் விளங்கி வந்தன. இத்துறைமுகப்-பட்டினங்களில் முத்துக் குளித்தலும், சங்கறுத்த-லும் ஆகிய தொழில்கள் சிறப்பாக நடைபெற்று வந்தன. ஆதலால், **'பாண்டிநாடு முத்துடைத்து,'** என்னும் புகழ் மொழி எழுந்தது.

8. **'கூடல்'** என வழங்கிய மதுரையைத் தலை நகராகக் கொண்டு ஆட்சி புரிந்த பாண்டிய மன்ன-ருள் **ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன்,**

தலையாலங்கானத்துச் செரு வென்ற நெடுஞ்செழியன், நெடுமாறன் என்பவர் புகழ் மிக்கவராவர். மதுரை மாநகரத்தில் பாண்டியரால் எடுப்பிக்கப்பட்ட மீனாட்சியம்மை ஆலயம், இன்றும் சிறப்புற்று விளங்குகிறது.

9. பாண்டிய வேந்தர் மூன்று தமிழ்ச் சங்கங்களை அமைத்துத் தமிழை வளர்த்தனர். அவர்கள் **வேப்பம்பூ மாலையையும் கயல்** பொறித்த **கொடி**யையும் தங்களுடைய தனி அடையாளங்களாகக் கொண்டார்கள்.

10. முற்காலத்திற் பேரும் புகழும் பெற்றுப் பெருநாடாய் விளங்கிய தமிழகம், இன்று பரப்பில் மிகவும் சுருங்கிவிட்டது. தமிழ் நாட்டின் பகுதிகள் சிலவற்றில் **மலையாளம், கன்னடம், ஆந்திரம்** என்னும் மொழிகள் தலையெடுத்து, அவற்றைக் கைக்கொண்டன. இன்று எஞ்சியுள்ள தமிழகத்தின் முன்னேற்றத்துக்கு உழைக்க வேண்டுவது நமது கடமையாகும்.

**அருஞ்சொற்பொருள்:**

பண்டைக் காலம்–பழைய காலம், வேங்கடமலை-திருப்பதி மலை, பேரரசு–பெரிய இராச்சியம், சிற்றரசு-சிறிய இராச்சியம், நிலப்பரப்பு-பிரதேசம், பகுதி–பாகம், வேழங்கள்–யானைகள், அகில்–மணம் உள்ள ஒரு வகை மரம், துறைமுகம்-கப்பல் தங்கும் நீர்த்துறை, சீர்-பெருமை, பொறித்த–பதித்த, சின்னம்–அடையாளம், கோ நகர்-தலை நகர், கடற்றுறை-துறைமுகம், ஈடும் எடுப்பும்-ஒத்ததும் மிக்கதும், காட்சியளிக்கிறது-காணப்படுகிறது, வாய்ப்பு–பேறு, அதிர்ஷ்டம்; எடுப்பிக்கப்பட்ட–கட்டுவிக்கப்பட்ட, எழில்-அழகு.

## பயிற்சி :

1. **விடை எழுது :—**

அ. பண்டைத் தமிழகத்தின் எல்லைகள் யாவை ?

ஆ. பண்டைத் தமிழகத்தில் இருந்த மூன்று பேரரசுகள் யாவை ?

இ. சேர நாட்டின் எல்லையும் சிறப்பும் யாவை ?

ஈ. சேர மன்னருள் சிறந்தவர் யாவர் ?

உ. சோழ நாட்டின் பெருமைக்குக் காரணம் யாது ?

ஊ. சோழ நாட்டின் தலை நகரங்களும் துறைமுகங்களும் யாவை ?

எ. பாண்டி நாட்டைக் குறித்து ஒரு சிறு குறிப்பு எழுது.

2. **இவற்றைத் தெரிந்துகொள் :—**

**ரகர-றகர வேறுபாடு :**

குரங்கு—வானரம் என்னும் பொருள் பெறும்.
குறங்கு—தொடை என்னும் பொருள் பெறும்.
குரவர்—பெரியோர் என்னும் பொருளது.
குறவர்—மலை வாழ் சாதியார்.
குரு—ஆசிரியர் என்னும் பொருளது.
குறு—குறுகிய, குள்ளமான என்னும் பொருள்களில் வரும்.

3. **எதிர்ச்சொற்களைப் பொருத்தி எழுது :—**

பெருமை, பெரும்பான்மை, பொய், போற்றல், மடமை, மரியாதை, அறிவு, அவமரியாதை, சிறுபான்மை, தூற்றல் சிறுமை. மெய்.

4. **இவற்றை அமைத்து வாக்கியங்கள் எழுது :—**

எல்லை, விளங்கின, சீரும் சிறப்பும், இயற்று, ஆட்சி, எழில் மிக்க, புகழ்.

# 3. தமிழ் மொழி

(பாட்டு)

எல்லை வடக்கினில் வேங்கட மாம்புகழ்
ஏந்திய தெற்கில் குமரிஎல்லை;
தொல்லை யரபிக் கடல்குடக் காம்கதிர்
தோன்றிடும் வங்கக் கடல்கிழக்காம் ; 1

இந்தநால் எல்லை இடையில் அமைந்திடும்
ஏற்றம் மிகுந்த நிலப்பரப்பில்
அந்தமாய் வீற்றிருந் தாட்சி புரிந்தநல்
ஆற்றல் மிகுந்த அருந்தமிழாம் ! 2

இனிமை எனும்பெயர் வாய்ந்தது வாம்அதற்(கு)
இன்பமும் அன்பும் உயிர்நிலையாம் !
தனியே இயங்கிடும் தன்மைய தாம்மொழித்
தரத்தில் உயர்தனிச் செம்மொழியாம் ! 3

இலகுநூல் பற்பல ஈன்றது வாமன்றி
எழுத்தொடு சொற்பொருள் யாப்பணியாம்
அலகில் இலக்கணம் பெற்றுவி ளங்கிடும்
அன்னை மொழிசெந் தமிழ்மொழியாம் ! 4

பொதியில் அகத்தியன் போற்றுதொல் காப்பியன்
புராரி தனைஎதிர் நக்கீரன்
துதியார் தலைமையில் தோன்றிய சங்கங்கள்
தொண்டால் வளர்ந்தகன் னித்தமிழாம் ! 5

தண்டமிழ் தன்னைப் பயின்றிடு வோம்தினம்
தாய்மொழிக் கேபணி செய்திடுவோம்!
இன்றைய விஞ்ஞான நூல்கள் அனைத்தையும்
இயற்றித் தமிழினில் இன்புறுவோம்! 6

—த. சே. உமாபதி

# 4. தமிழ் மொழி

1. '**மொழி**' என்னும் சொல்லுக்குப் '**பாஷை**' என்பது பொருள். மக்கள் தங்கள் புலன்களால் அறியும் விஷயங்களையும், மனத்தால் நினைக்கும் எண்ணங்களையும் பிறர்க்கு அறிவிக்கும் சாதனமாய் இருப்பது மொழி. உலகின் வெவ்வேறு நாடுகளில் வாழும் மக்கள், வெவ்வேறு மொழிகளைப் பேசு-கிறார்கள். ஆதலால், நூற்றுக் கணக்கான மொழி-கள் இக்காலத்தில் வழக்கத்தில் உள்ளன. இவற்-றுள் மிகத் தொன்மையான மொழிகள் ஒரு சிலவே. அத்தொன்மொழிகளுள் ஒன்று நமது தமிழ் மொழி.

2. '**தமிழ்**' என்னும் சொல்லுக்கு '**இனிமை**' என்பது பொருள். வடவேங்கடத்துக்கும் தென்-குமரிக்கும் குணக்கடலுக்கும் குடக்கடலுக்கும் இடைப்பட்ட நிலப்பரப்பில் தமிழ் வழங்கி வந்தது என்பதை நூல்களால் அறியலாம்.

3. தமிழைப் பெரிதும் போற்றி வளர்த்த பெருமை பாண்டிய மன்னருக்கே உரியது. தமிழ்ச் சங்கங்கள் மூன்று, பாண்டிய மன்னர்களால் அமைக்கப் பெற்றன. 'தமிழ்ச் சங்கம்' என்பது, 'தமிழ்ப் புலவர்களின் கூட்டம்' எனப் பொருள்-படும். பாண்டியர்களால் அமைக்கப்பட்ட மூன்று சங்கங்களும் **முதற்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம்** எனப் பெயர் பெறும். முதற்சங்க-மும் இடைச் சங்கமும் இருந்த காலம் இன்னதெனத் திட்டமாகத் தெரியவில்லை. கடைச்சங்கம் மட்டும்

ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இருந்ததென்று அறிஞர் கூறுகின்றனர்.

4. முதற்சங்கம் தென்மதுரையில் இருந்தது என்பர். அச்சங்கத்துக்குத் தலைமை தாங்கியவர் **அகத்தியர்.** அவர் தமிழ் மொழிக்கு ஓர் இலக்கணம் இயற்றினர். அதற்கு '**அகத்தியம்**' என்பது பெயர். தென்மதுரை கடலில் மூழ்கி அழிந்தது. ஆதலால், அச்சங்கத்தவரால் இயற்றப்பட்ட நூல்கள் நமக்குக் கிடையாமற்போயின.

5. இடைச்சங்கம் **கபாடபுரத்**தில் இருந்தது. இடைச்சங்கத்தின் தலைவர் **தொல்காப்பியர்.** அவர் காலத்தில் பல அரிய தமிழ் நூல்கள் தோன்றின. தொல்காப்பியர் அகத்தியரின் மாணவர் பன்னிருவருள் ஒருவர். அவரும் தமிழ் மொழிக்கு ஓர் அரிய இலக்கணம் இயற்றினர். அதற்குத் **தொல்காப்பியம்** என்பது பெயர். அது எழுத்திலக்கணத்தையும், சொல்லிலக்கணத்தையும், பொருள் இலக்கணத்தையும் விரிவாகக் கூறுகின்றது. அதைப் படித்தால், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் தமிழர் எவ்வாறு வாழ்ந்தனர் என்பதை ஒருவாறு அறியலாம். கபாடபுரமும் கடலால் அழிக்கப்பட்டது. ஆதலால், இடைச்சங்க காலத்து நூல்களுள் தொல்காப்பியம் தவிர, மற்ற நூல்கள் எல்லாம் அழிந்தன. இக்காலத்தில் தமிழில் வழங்கும் நூல்கள் எல்லாவற்றிலும் பழமையானது தொல்காப்பியமேயாகும்.

6. கடைச்சங்கம் வைகையாற்றின் கரையில் உள்ள **மதுரை**யில் இருந்தது. அதற்குத் தலைவர் **நக்கீரர்** என்பவர். கடைச்சங்கத்தில் புலவர் பலர்

இருந்து தமிழ் நூல்கள் இயற்றித் தமிழை வளர்த்தனர். அப்புலவர் அனைவரும் ஓர் ஊரினர் அல்லர்; ஓர் இனத்தினர் அல்லர்; ஒரு சமயத்தவரும் அல்லர். கடைச்சங்கத்திற் பெண்பாற்புலவர் பலரும் இடம் பெற்றிருந்தனர் என்று நூல்கள் கூறுகின்றன. கடைச்சங்க காலத்து ஆண்பாற்புலவர்களுள் **நக்கீரர், கபிலர், பரணர், சாத்தனுர்** என்பவர் சிலர். பெண்பாற்புலவர்களுள் **ஔவையார், காக்கை பாடினியார், வெள்ளி வீதியார்** என்பவர் சிலர்.

7. கடைச் சங்க காலத்து நூல்களுள் எல்லா நூல்களும் நமக்குக் கிடைத்தில. செல்லுக்கும், நீருக்கும், நெருப்புக்கும் இரையானவை போக, முப்பத்தாறு நூல்களே நமக்குக் கிடைத்துள்ளன. அம்முப்பத்தாறில் பதினெட்டு நூல்கள் **'மேற்கணக்கு நூல்கள்'** எனவும், பதினெட்டு நூல்கள் **'கீழ்க்கணக்கு நூல்கள்'** எனவும் கூறப்படும். கீழ்க்கணக்கு நூல்களுள் மிகவும் சிறந்தது **திருக்குறள்.**

8. கடைச்சங்க காலத்துக்குப் பிறகு தோன்றிய புலவர் எண்ணிலர். அவர்கள் இயற்றிய நூல்களும் எண்ணில. பிற்காலத்து நூல்களுள் **சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி** என்னும் ஐம்பெருங்காவியங்களும் சிறந்தவை. இவற்றுள் முதல் மூன்று மட்டுமே நமக்குக் கிடைத்துள்ளன. **சூளாமணி, உதயணன் காதை, நீலகேசி, நாககுமார காவியம், யசோதர காவியம்** என்னும் ஐஞ்சிறு காவியங்களும், **கம்பராமாயணம், சேக்கிழார்** இயற்றிய **பெரிய புராணம்,** மூவர் இயற்றிய **தேவாரம்,**

**மாணிக்கவாசகர்** இயற்றிய **திருவாசகம்**, ஆழ்வார்கள் இயற்றிய **நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்** என்பவையும் சிறந்த நூல்களாகும். இவற்றைப் படித்துத் தமிழில் புலமை அடைய ஒவ்வொரு தமிழரும் முயலவேண்டும்.

**அருஞ்சொற்பொருள் :**

புலன்-உணர்வு, தொன்மை-பழமை, நூல்கள்-புத்தகங்கள், போற்றி-புகழ்ந்து, ஏறத்தாழ-சுமார், விரிவாக-பரக்க, கிடைத்தில-கிடைக்கவில்லை, எண்ணிலர்—கணக்கற்றவர்.

**பயிற்சி :**

**1. விடை எழுது :—**

அ. பாஷையின் பயன் யாது?

ஆ. தமிழ் எத்தகைய மொழி?

இ. முதற்சங்கம் எங்கிருந்தது? அதன் தலைவர் யார்?

ஈ. இடைச்சங்கம் எங்கிருந்தது? அதன் தலைவர் யார்?

உ. தொல்காப்பியம் யாரால் இயற்றப்பட்டது? அது எதைப்பற்றியது? அதனுல் நாம் எதை அறியலாம்?

ஊ. கடைச்சங்கத்தின் தலைவர் யார்? கடைச்சங்க காலத்து நூல்கள் எவை?

எ. பிற்கால நூல்களுள் முக்கியமானவை எவை?

ஏ. தமிழரின் கடமை யாது?

**இலக்கணம்**

**முற்றுச் சொற்றொடர்—எச்சச் சொற்றொடர்**

**இவற்றைப் படி :—**

அ. பள்ளிக்குச் சென்ற வேலன்

ஆ. பரந்தாமன் கடைக்குப் போய்

இ. பள்ளிக்குச் சென்ற வேலன் பாடம் படித்தான்.

ஈ. பரந்தாமன் கடைக்குப் போய்ப் பழம் வாங்கினான்

சொற்கள் தொடர்ந்து நின்று முடிந்த கருத்தைத் தெரிவிப்பது வாக்கியம் என்பதை நீ நான்காம் வகுப்பில் அறிந்தாய்.

இங்கு முதல் இரண்டு உதாரணங்களில் சொற்கள் தொடர்ந்து நின்று ஒரு கருத்தைத் தெரிவிக்கின்றன. ஆனால், கருத்து முடியவில்லை. இவ்வாறு **கருத்து முடியாத சொற்றொடர் எச்சச் சொற்றொடர்** எனப்படும். மூன்றாவது நான்காவது உதாரணங்களில் சொற்கள் தொடர்ந்து நின்று முடிந்த கருத்தைத் தெரிவிக்கின்றன.

இவ்வாறு **கருத்து முடிந்த சொற்றொடர் முற்றுச் சொற்றொடர்** எனப்படும். **வாக்கியம்** என்பது இதற்கு வழங்கும் வேறு பெயர்.

**2. இவற்றைத் தெரிந்துகொள் :**

ரகர – றகர வேற்றுமை :

**குரை**—'ஒலி' என்னும் பொருளில் வரும்.
**குறை** —'குறைவு' என்னும் பொருளது.

**சீரிய**—'பெருமை பொருந்திய' என்னும் பொருளது.
**சீறிய**—'கோபித்த' என்னும் பொருள் உடையது.

**செரித்தல்**—'சீரணித்தல்' என்னும் பொருளது.
**செறித்தல்** – 'நெருக்குதல்' என்னும் பொருளது.

**3. எதிர்ச்சொற்களைப் பொருத்தி எழுது :—**

முதல், மூடு, மென்மை, வரவு, வளர்தல், வலம், வாழ்வு. செலவு, இடம், தாழ்வு, வன்மை, தேய்தல். திற, ஈறு.



## 5. நாட்டுக்கு உழைத்த நற்குடும்பம்

1. நமது நாட்டுக்கு வடக்கில் **காஷ்மீரம்** என்னும் நாடு இருக்கிறது. இது இமயமலைத் தொடர்களின் இடையில் அமைந்திருக்கிறது. அம்மலை நாடு இயற்கைக் காட்சிகளுக்கு இருப்பிடமானது. அந்நாட்டில் ஏறத்தாழ இருநூறு ஆண்டுகளுக்குமுன் பிராமணர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் பெயர் **ராஜ்கால்** என்பது. அவர் **வடமொழி, பாரசீகம்** என்னும் இருமொழிகளிலும் புலமை பெற்றிருந்தார். ஆதலால், அவர் **பண்டித ராஜ்கால்** என்று வழங்கப்பட்டார்.

2. அவர் புலமையைக் கண்டறிந்த டில்லிச் சுல்தான் ஒருவர், அவரைத் தம் அவைப் புலவராக அமர்த்திக்கொண்டார். அவருக்கு ஒரு மாளிகையும் சிறிது நிலமும் சுல்தானல் பரிசிலாக அளிக்கப்பட்டன. அம்மாளிகை ஒரு கால்வாயின் கரையில் இருந்தது. கால்வாய் என்னும் சொல்லுக்கு **'நஹார்'** என்பது உருதுச் சொல். எனவே, நஹார் கரையில் வாழ்ந்த ராஜ்கால், **பண்டித நெஹ்ரு** என்று வழங்கப்பட்டார். ஆதலால், அவர் கால்வழியில் தோன்றிய அனைவர்க்கும் **நெஹ்ரு** என்னும் பட்டம் வழங்கத் தொடங்கியது.

3. ராஜ்காலுக்குப் புதல்வர் மூவர் இருந்தனர். அவருள் மூத்தவருக்குப் **பண்டித மோத்திலால் நெஹ்ரூ** என்பது பெயர். '**மோத்தி**' என்னும் உருதுச்சொல், '**முத்து**' என்னும் பொருள் உடையது. மோத்திலால் **கங்கையும் யமுனையும்** கூடுகின்ற இடத்தில் உள்ள அலகாபாதில் நீதி வாதத் தொழில் நடத்தி நிரம்பப் பொருள் திரட்டியிருந்தார். அவர் **சொரூபராணியார்** என்ற அம்மையாரைத் திருமணம் செய்துகொண்டார். அவ்வம்மையார், 1889-ஆம் ஆண்டில் ஒரு மகவை ஈன்ருர். அம்மகவே இன்று நமது நாட்டின் முதல் அமைச்சராய் இருந்துவரும் **பண்டித ஜவாஹர்லால் நெஹ்ரூ**. '**ஜவாஹர்**' என்னும் இந்துஸ்தானிச் சொல், '**மாணிக்கம்**' என்னும் பொருள் உடையதாகும். எனவே, நம் முதல் அமைச்சர், தமது பெயருக்கேற்ப, மனிதருள் மாணிக்கமாய் விளங்கி வருவதை நாம் அறிவோம்.

4. ஜவாஹருக்கு **விஜயலட்சுமி, கிருஷ்ணு பாய்** என்னும் தங்கைமார் இருவர் உளர். ஜவாஹர் இளமையில் எந்தப் பள்ளிக்கும் அனுப்பப்படவில்லை. அறிவிற்சிறந்த ஆசிரியர் சிலர் அவருக்கு வீட்டிலேயே கல்வி கற்பித்தனர். பின்னர் ஜவாஹர் உயர்கல்விக்காக இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்டார். அங்கு அவர் வழக்கறிஞர் தொழிலுக்குப் படித்துப் **பாரிஸ்தர்** பட்டம் பெற்றுத் தமது தாய் நாடு திரும்பினுர்.

5. ஜவாஹர் இளைஞராயிருந்த போதே அவர் மனத்தில் நாட்டுப் பற்றுக் குடிகொண்டிருந்தது. அவர் இங்கிலாந்தில் இருந்த போது **கோகலே**,

**லஜபதிராய்** போன்ற இந்திய அரசியல் அறிஞர்களின் சொற்பொழிவுகள் அவர்தம் நாட்டுப்பற்றை வளரச் செய்தன. ஆதலால், அவர் இந்தியாவுக்கு வந்தவுடனே காங்கிரஸ் மகாசபையிற்சேர்ந்தார். 1916–ஆம் ஆண்டில் நடைபெற்ற **அகில இந்திய காங்கிரஸ்** மகாநாட்டில் **காந்தியடிகளின்** நட்பை அவர் பெற்றார். அதுமுதல் அவர் காந்தியடிகளின் உத்தம சீடருள் ஒருவராய் விளங்கி வந்தார்.

6. ஜவஹர், **கமலா** என்ற கன்னியரை மணந்துகொண்டார். அவ்வம்மையார், நற்குண நற்செயல்கள் நிரம்பியவர்; இந்தி மொழியோடு ஆங்கிலத்திலும் வல்லவர்; தியாக உணர்வும் திட நெஞ்சமும் படைத்தவர். அவ்வம்மையார் பர்த்தாவுக்கு ஏற்ற பதிவிரதையாய் இருந்துவந்தார். அவர் வயிற்றில் ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதற்கு **இந்திரா** என்னும் பெயர் சூட்டப்பெற்றது.

7. ஜவாஹரும், அவர் பெற்றோரும், மனைவியும், மகளும், தங்கையரும் விரும்பியிருந்தால், அரசகுடும்பத்தினர் போல வாழ்ந்திருக்கலாம். ஆனால், அவர்கள் விருப்பம் அதுவன்று. அவர்கள் பொன்னையும், பொருளையும், சுகத்தையும் பொருட்படுத்தவில்லை; தாய் நாடே தங்கள் உடல் எனவும், நாட்டு மக்கள் நலமே தங்கள் உயிர் எனவும் மதித்தார்கள்; தங்கள் உடல், பொருள், ஆவி அனைத்தையும் நாட்டின் நலத்துக்காகத் தியாகம் செய்ய முற்பட்டார்கள். மோத்திலால் நெஹ்ரூ, தேசத் தொண்டில் ஈடுபட்டுச் சிறை புகுந்து, அங்கு நோயுற்று உயிர் நீங்கினார். ஜவாஹர்லால் நெஹ்ரூ, ஒன்பது முறை சிறைச்சாலைக்குச் சென்றதோடு அடியுண்டும் அல்லற்பட்–

டார். இவர் மனைவியாரான கமலா நெஹ்ருவும் வரி கொடா இயக்கத்திற்சேர்ந்து, சிறை புகுந்து, நோயுற்று மாண்டார். அன்னையாரான சொரூப-ராணியாரோ, கணவரும், புதல்வரும், மருகியாரும் சிறைச்சாலையில் துன்புறக் கண்டும், அதை ஒரு சிறிதும் பொருட்படுத்தாமல், ஊர் வலம் ஒன்றைத் தலைமை தாங்கி நடத்திச் சிறைப்பட்டார்.

8. இத்தகைய தியாக உணர்ச்சியும் நாட்டுப் பற்றும் மிகுந்த நற்குடும்பத்தவரை நம் நாட்டு முதல் அமைச்சராகப் பெற்றிருப்பது நமது பாக்கி-யமேயாகும்! நாம் இவர் செயல்களையும் இவர் குடும்பத்தவர் செயல்களையும் நமக்குச் சிறந்த படிப்பினைகளாகக் கொள்ள வேண்டும்.

**அருஞ்சொற்பொருள் :**

இயற்கைக் காட்சி—தாமே அமைந்த மலை யாறு ஏரி கடல் காடு முதலியவற்றின் தோற்றம், சுல்தான்—முஸ்லிம் அரசர், அவை—சபை, மாளிகை-பெரிய வீடு, பரிசில்—இனும், கால்வழி—மரபு, புதல்வர்-மைந்தர், திரட்டி—சேர்த்து, மகவு—குழந்தை, நீதி வாதத் தொழில்-வழக்கறிஞர் தொழில், வக்கீல் தொழில்; சொற்பொழிவு—பிரசங்கம், பேச்சு ; உத்தமம்—சிறப்பு, கன்னி-பெண், பர்த்தா—கணவன், ஆவி-உயிர், அல்லற்பட்டார்-துன்ப மடைந்தார், பாக்கியம்-அதிர்ஷ்டம், படிப்பினை—பாடம்.

**பயிற்சி :**

**1. விடை எழுது :—**

அ. ஜவாஹர்லால் நெஹ்ருவின் பூர்விக இருப்பிடம் எது? மூதாதையார் யார்?

ஆ. 'நெஹ்ரு' என்னும் பெயர் வழங்கக் காரணம் யாது?

இ. நெஹ்ருவின் குடும்பத்தவர் யாவர்?

ஈ. அவர்கள் நாட்டுக்குச் செய்த தொண்டுகள் யாவை?

**2. இவற்றைத் தெரிந்துகொள் :—**

**ரகர—றகர வேறுபாடு**

சொரி—'பெய்', 'பொழி' என்னும் பொருளில் வரும்.
சொறி-ஒரு வகைச் சிரங்கு

சோர்—சோர்ந்து போ, தளர்ந்து போ
சோறு—சாதம் என்னும் பொருளது.

தரி—அணிந்துகொள் (உ-ம்) சட்டையைத் தரித்தான்.
தறி-'வெட்டு', 'துணி நெய்யும் கருவி' என்னும் பொருள்களில் வரும்.

3. எதிர்ச்சொற்களை இணைத்தெழுது :—

| | |
|---|---|
| வாழ்வு | தட்பம் |
| விருப்பு | தண்ணீர் |
| வெப்பம் | ஒற்றுமை |
| வெந்நீர் | நனவு |
| வேற்றுமை | வெறுப்பு |
| கனவு | தாழ்வு |

4. இவற்றை அமைத்து வாக்கியங்கள் எழுது :—

இயற்கைக் காட்சி, மாளிகை, புதல்வர், பேரும் புகழும், பாக்கியம், படிப்பினை.

## இலக்கணம் :

### எழுத்து—வகைகள் :

**எழுத்து என்பது என்ன ?**

**மனப்பாடம் செய் :**

**சொல் உண்டாவதற்குக் காரணமாக உள்ள ஒலியே எழுத்து.**

நான்காம் வகுப்பில் உயிர் எழுத்துப் பன்னிரண்டு, மெய் எழுத்துப் பதினெட்டு, உயிர்மெய்யெழுத்து இரு நூற்றுப் பதினாறு, ஆய்த எழுத்து ஒன்று, ஆகத் தமிழ் எழுத்துக்கள் இரு நூற்று நாற்பத்தேழு என்பதை அறிந்தோம். இங்கு அவ்வெழுத்துக்களின் வகைகளை அறியலாம் :

**இவற்றை உச்சரித்துப் பார் :**

அ, இ, உ, எ, ஒ—இவை குறுகிய ஓசை உடையவை. ஆதலால், குறில் அல்லது குற்றெழுத்து எனப்படும்.

ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஒள—இவை நீண்ட ஓசை உடையவை. ஆதலால், நெடில் அல்லது நெட்டெழுத்து எனப்படும்.

**மனப்பாடம் செய் :—**

உயிர் எழுத்துக்கள் பன்னிரண்டு. அவை குறில், நெடில் என இருவகைப்படும்.



## 6. நீலகிரி

1. நமது நாட்டின் இடையில் கிழக்கு மேற்காக வியாபித்திருக்கிறது **சாத்பூரா மலைத்தொடர்**. இதற்குத் தெற்கில் உள்ள உயர்ந்த நிலப் பகுதிக்குத் **தட்சிண பீடபூமி** என்பது பெயர். இப்பீடபூமியின் கிழக்கு மேற்கு விளிம்புகளாய் அமைந்துள்ள மலைகள், முறையே **கிழக்கு மலைத்தொடர்**, **மேற்கு மலைத்தொடர்** எனப் பெயர் பெறும். மைசூர் இராச்சியத்துக்குத் தெற்கில் இம்மலைத்தொடர்கள் ஒன்று சேரும் இடத்துக்கு **நீலகிரி** என்பது பெயர்.

2. '**கிரி**' என்னும் சொல்லுக்கு '**மலை**' என்பது பொருள். எனவே, 'நீலகிரி' என்னும் தொடர் 'நீலமலை' எனப் பொருள்படும். இப்பெயர் இதற்கு

வழங்குவதற்குக் காரணம் யாது? நீலகிரி கடல் மட்டத்தைவிடச் சுமார் ஏழாயிரம் அடி உயரம் உள்ளது. ஆதலால், இம்மலையின் சிகரத்தை நீல வண்ணமான மேகம் எப்போதும் சூழ்ந்துகொண்டிருக்கும். ஆதலாற்றான் இம்மலை இப்பெயர் பெற்றது.

3. நீலகிரியின் உச்சியில் சற்றுச் சமமாய் உள்ள பகுதியில் **உதகமண்டலம்** என்னும் பட்டணம் அமைந்திருக்கிறது. இதை அடுத்துக் கீழே மலைச் சரிவு சமமாய் உள்ள இடங்களிலுள்ள பட்டணங்களுள் முக்கியமானவை **கூனூரும் கோட்டகிரியு**மாம்.

4. இப்பட்டணங்கள் சென்னை இராச்சியத்தின் கோடை வாச ஸ்தலங்களாய் விளங்குகின்றன. பொதுவாக ஓர் இடத்திலிருந்து செங்குத்தாய் வான் நோக்கி மேலே செல்லச்செல்ல வெப்பம் குறைந்துகொண்டே போகும். ஆதலால், கோடை காலத்தில் கடல் மட்டத்தில் இருப்பதைக்காட்டிலும் இம்மலைப் பட்டணங்களில் வெப்பம் மிகவும் தணிந்திருக்கும். இதனாலேதான் நமது இராச்சியத்தில் உயர்ந்த பதவிகளில் இருக்கும் அதிகாரிகளும், மற்றச் செல்வர்களும் கோடை காலத்தில் நீலகிரிக்குச் செல்கின்றார்கள்.

5. நீலகிரியின் மீது பல சிறு கிராமங்கள் உண்டு. அவற்றில் நமது நாட்டுப் பழங்குடிகளின் சந்ததியார் வாழ்கின்றனர். அவர்கள் **தொதுவர், படகர், இருளர், குறும்பர்** என்னும் இனத்தவர்கள். அவர்களுள் தொதுவர், மாடு மேய்ப்பதையே முக்கியத் தொழிலாகக் கொண்டவர்; படகர், பயி–

ரிட்டுப் பிழைக்கின்றனர்; இருளர், தோட்ட-வேலையை மேற்கொண்டவர்; குறும்பர், வேட்டை-யாடுபவர்.

6. நீலகிரியில் காப்பித் தோட்டங்களும், தேயிலைத் தோட்டங்களும் அதிகம். மலைச் சரிவு படிப்படியாய் அமைந்துள்ள இடங்களைப் பண்படுத்-திக் கோதுமை, கேழ்வரகு, பார்லி என்னும் தானி-யங்களைப் பயிரிடுகின்றனர். இவையன்றி, உருளைக்-கிழங்கும், கோஸ் முதலிய மேனாட்டுக் காய்கறிகளும் மிகுதியாகப் பயிர் செய்யப்படுகின்றன. நீலகிரியின் மீது அடர்ந்த காடுகள் உண்டு. அவற்றிற் காணப்-படும் மரங்களுள் தேக்கும் யூக்கலிப்டஸூம் முக்கிய-மானவை. யூக்கலிப்டஸிலிருந்து தைலம் இறக்கு-வது அங்குக் குடிசைத் தொழிலாய் நடைபெறு-கின்றது.

7. நீலகிரியின் உச்சியில் உள்ள பட்டணங்-களுக்குச் செல்ல இரண்டு மோட்டார்ச் சாலைகளும், ஓர் இரயில் பாதையும் உண்டு. மோட்டார்ச் சாலை-களுள் ஒன்று மேட்டுப் பாளையத்திலிருந்தும், மற்-றொன்று மைசூரிலிருந்தும் அமைக்கப்பட்டுள்ளன. எந்த ஊர்தியிற்சென்றாலும், அம்மலைக் காட்சி கண்ணைக் கவரத்தக்கதாகவே இருக்கும். எந்தப் பக்கம் திரும்பினாலும், மரங்களும் செடிகளும் பச்சைப்பசேரென்று காணப்படும். தேயிலைத் தோட்டங்களும், மற்றத் தோட்டங்களும் மாடிப்-படிகள் போல அடுக்கடுக்காய்க் காணப்படும் இடை இடையே அருவிகள் தோற்றமளிக்கும். நீலகிரியின் மீதுள்ள ஏரி மிகவும் பெரியது. அது எக்காலத்தி-லும் வற்றுவதே இல்லை. அம்மலைக் காட்சிகளை

நேரிற்சென்று கண்டு களிக்க வேண்டுமேயன்றி, எழுதி வருணித்தல் இயலாது.

அருஞ்சொற்பொருள் :

இடையில்-மத்தியில், வண்ணம்-நிறம், மேகம்-முகில், மப்பு ; சிகரம்-உச்சி, சூழ்ந்து-சுற்றி, சற்று-சிறிது, கோடை-வெயிற்காலம், வாசஸ்தலம்-வசிக்கும் இடம், செங்குத்தாய்-சரிவில்லாமல், வான்-ஆகாயம், தணிந்து-குறைந்து, பதவி-உத்தியோகம், சந்ததி-வமிசம், சாலை-தெரு, ஊர்தி-வாகனம், வருணித்தல்-விவரித்தல், இயலாது-முடியாது, களிக்க-சந்தோஷிக்க.

பயிற்சி :

1. விடை எழுது :—

அ. நீலகிரி மலை எங்கிருக்கிறது ?

ஆ. அதன்மீதுள்ள பட்டணங்கள் யாவை ?

இ. நீலகிரிக்கு அப்பெயர் வழங்கக் காரணம் யாது ?

ஈ. நீலகிரியின்மீது வாழும் மக்கள் யாவர் ? அவர்களின் தொழில்கள் யாவை ?

உ. நீலகிரியின்மீது உற்பத்தியாகும் பயிர் வகைகள் யாவை ?

ஊ. நீலகிரி, கோடை வாசஸ்தலமாய் விளங்கக் காரணம் யாது ?

2. இவற்றைத் தெரிந்துகொள் :—

ரகர—றகர வேற்றுமை :

**நிரை**—'வரிசை' என்னும் பொருளில் வரும்—பசுநிரை.
**நிறை**—'நிறைவு' என்னும் பொருளில் வரும்—குளம் நிறைந்தது.
**நீர்**—'ஜலம்' என்னும் பொருளது.
**நீறு**—'வீபூதி' என்னும் பொருளது.
**நெரி**—'நெருக்கு', 'உடை' என்னும் பொருளில் வரும்.
**நெறி**—'வழி', 'நீதி' என்னும் பொருள்களில் வரும்.

3. எதிர்ச்சொற்களை இணைத்தெழுது :—

| | |
|---|---|
| அகம் | முடி |
| அகழ்தல் | அநர்த்தம் |
| அகலம் | குவிதல் |
| அடி | குறுக்கம் |
| அர்த்தம் | தூர்த்தல் |
| அலர்தல் | புறம் |

4. இவற்றை அமைத்து வாக்கியங்கள் எழுது :—

வியாபித்திருக்கிறது, விளிம்பு, வழக்கம், சூழ்ந்திருக்கும், பகுதி, சரிவு, கோடை காலம்.

## இலக்கணம் :

### எழுத்து—வகைகள் (தொடர்ச்சி)

இவற்றைப் படி :

க், ச், ட், த், ப், ற் —இவை வலிய ஓசை உடையவை. ஆதலால், வல்லினம் அல்லது வல்லெழுத்து எனப் பெயர் பெறும்.

ங், ஞ், ண், ந், ம், ன்—இவை மெல்லிய ஓசை உடையவை, ஆதலால், மெல்லினம் அல்லது மெல்லெழுத்து எனப் பெயர்பெறும்.

ய், ர், ல், வ், ழ், ள் —இவை வல்லெழுத்தின் ஓசைக்கும் மெல்லெழுத்தின் ஓசைக்கும் இடைப்பட்ட ஓசை உடையவை. ஆதலால், இடையினம் அல்லது இடையெழுத்து எனப் பெயர் பெறும்.

மனப்பாடம் செய் :

மெய்யெழுத்துப் பதினெட்டு. அவை வல்லினம், மெல்லினம், இடையினம் என மூன்று வகைப்படும்.



# 7. ஔவையார்

## (நாடகக் காட்சி)

### காட்சி—1

**இடம் :** தகடூர் அரண்மனை

**காலம் :** முற்பகல்

**பாத்திரங்கள் :** ஔவையார், அதியமான், சபையார்.

[இக்காலத்தில் **மைசூர்** என வழங்கும் நாடு அக்காலத்தில் சேர நாட்டின் ஒரு பகுதியாய் இருந்தது. அங்குத் **தகடூர்** என்னும் பட்டணத்தில் **அதியமான்** என்ற அரசன் ஆட்சி புரிந்தான் அவன் பாவலர்க்குப் பரிசு வழங்குவதில் பெயர்பெற்றவன். ஔவையார் அவனைப் பாடிப் பரிசு பெறச் சென்றார். அப்போது அதியமான் சபையில் இருந்தான்.]

(ஔவையார் வரவை அறிவிக்கக் காவலன் சபைக்கு வருகின்றான்.)

அதியமான் : காவல, என்ன செய்தி ?

**காவலன் :** பெருமானே, வணக்கம்! உங்களைக் காண ஔவையார் வந்திருக்கின்றார்; வாயிலில் இருக்கின்றார்.

**அதி :** மிகவும் மகிழ்ச்சி! அவர் ஒப்பற்ற தமிழ்ப் புலவர் என்று பலரும் கூறக் கேட்டிருக்கிறேன். உடனே அவரை உள்ளே அழைத்து வா.

(காவலன் போகிறான்.)

**அதிய :** (சபையாரைப் பார்த்து) பெருமக்களே, நம்மைக் காண வந்திருக்கும் ஔவையார் பாணர் இனத்தைச் சேர்ந்தவர்; ஆடுவதிலும், யாழ் இசைப்பதிலும் தேர்ச்சி பெற்றவர்; நம் அமுதத் தமிழை ஐயமறக் கற்றவர்; சுவை மிக்க தமிழ்ப் பாடல்களை விரைவாய் இயற்றும் திறமை உடையவர்; இவற்றைக்காட்டிலும் இவரைப் பற்றி நாம் பெருமைகொள்ளத் தக்கது ஒன்று உண்டு. அது என்ன தெரியுமா?

**அமைச் :** தெரியும். அது இத்தனை சிறப்புக்கும் இருப்பிடமாகிய இப்பெண்பாற்புலவர், நமது நாட்டிற் பிறந்தவர் என்பது. இவரால் நமது நாட்டுக்குத் தனிச்சிறப்பு ஏற்பட்டுள்ளது.

**அதிய :** அமைச்சரே, நீர் கூறியது உண்மை; முற்றிலும் உண்மை.

(ஔவையார் வருகின்றார்; அரசனும், சபையோரும் தங்கள் பீடங்களை விட்டு எழுந்திருக்கின்றார்கள். அரசன் கைகூப்பி)

வாருங்கள்! வாருங்கள்! அருந்தமிழ் வல்ல அம்மையீர், வாருங்கள்! (தன் அருகில் உள்ள ஒரு பீடத்தைக் காட்டி) இதில் இருங்கள்.

ஔவை : சேரர் குலப் பெருமானே, வாழ்க உன் வெற்றி! வளர்க உன் செல்வம்! (பீடத்தில் இருக்கின்றார்)

அதிய : அம்மையீர், நீங்கள் இங்கு வந்த இந்நாள் நன்னாள்! உங்கள் புலமையைப் பற்றிக் கேள்விப்படாத நாள் இல்லை; உங்களைப் பற்றிப் பேசாத நாள் இல்லை; உங்களைக் காண வேண்டும் என்று எண்ணாத நாள் இல்லை. உங்களைக் கண்டது எனக்குப் பெருமகிழ்ச்சி அளிக்கின்றது!

ஔவை : அரசர் பெருமானே, உன்னைப் போலவே நானும் உன்னுடைய வீரத்தைப் பற்றியும், வெற்றிகளைப் பற்றியும், கொடையைப் பற்றியும் கேள்விப்படாத நாள் இல்லை. உன்னைக் காண வேண்டுமென்று பல நாட்கள் முயன்றேன். இன்றுதான் அப்பேறு கிடைத்தது! தேவியும், குழந்தைகளும் நலந்தானே!

அதிய : உங்களைப் போன்ற பெரும்புலவர்களின் ஆசி உள்ளவரையில் நலத்துக்குக் குறைவேது! எல்லாரும் நலந்தான். அம்மையீர், நீங்கள் நெடுந்தொலைவு நடந்து வந்திருக்கின்றீர்கள் என்பதை உங்கள் முகம் காட்டுகிறது. எழுந்திருங்கள்; உணவு கொண்ட பின் பேசலாம்.

(பீடத்தை விட்டு எழுந்திருக்கிறான். எல்லாரும் எழுந்திருக்கின்றனர்.)

[திரை]

## காட்சி—2

**இடம் :** அதியமான் சபை

**காலம் :** பிற்பகல்

**பாத்திரங்கள் :** அதியமான், ஔவையார், அமைச்சர், காவலன்.

[அதியமானும் அமைச்சரும் பேசுகின்றனர்.]

**அதியமான் :** அமைச்சரே, தொண்டைமானுக்கும் நமக்கும் பகை ஏதுமில்லையே! திடீரென்று ஏன் அவன் படை திரட்டுகிறான்? ஏன் அவன் நமது நாட்டின்மீது படையெடுக்க எண்ணுகிறான்? காரணம் விளங்க வில்லையே!

**அமைச்சர் :** காரணம் தெரியவில்லையா? உங்கள் புகழ் நாளுக்குநாள் வளர்ந்து, தமிழ் நாடெங்கும் பரவுவதே காரணம். சுருங்கக் கூற வேண்டுமானால், பொறாமைதான் காரணம். காலம் தாழ்த்தாமல், நமது படையைச் செலுத்தி அவனுக்குப் புத்தி புகட்ட வேண்டும். அதுதான் இப்பொழுது நாம் செய்யத் தக்கது.

**அதிய :** அமைச்சரே, நீர் சொல்வது உண்மைதான். ஆயினும், என் மனம் என்னவோ, இப்பொழுது போரின்மீது செல்லவில்லை. இப்போரைத் தவிர்க்கத் தக்க ஏற்பாடு ஏதேனும் செய்ய எண்ணுகிறேன். (காவலன் வருகிறான்.)

**காவலன் :** அரசர் பெருமானே, வணக்கம்! ஔவையார் உங்களைக் காண விரும்புகின்றார்.

**அதிய :** காவல, வரச்சொல். (காவலன் போகின்றான்.) அமைச்சரே, இந்தப் போரைத் தவிர்க்க ஒரு வழி தோன்றுகிறது எனக்கு!

**அமைச் :** என்ன வழி அது? எனக்குக் கூறலாமோ?

**அதிய :** தகுதி உள்ள ஒருவரைத் தொண்டைமானிடம் தூதனுப்பி, நமது படை வலியினை அவனுக்குத் தெரிவிக்க வேண்டும். அவன் தனது வலியையும் நமது வலியையும் ஒப்பிட்டறியாமல், போர் செய்யத் துடிக்கிறான். நமது வலிமையை உணர்ந்தால், அவன் போரைக் கைவிடக் கூடும். தூதராக யாரை அனுப்பலாம்?

**அமைச் :** இதற்கு யோசனை ஏன்? அதிருஷ்ட வசமாக ஔவையாரே இங்கு இருக்கின்றனரே!

[ஔவையார் வருகின்றனர். அரசனும் அமைச்சனும் எழுந்து கை கூப்புகின்றனர்.]

**அதிய :** வாரும்! வாரும்! நல்ல நேரத்தில் வந்தீர்! இப்பீடத்தில் இரும்! (எல்லாரும் பீடங்களில் இருக்கின்றனர்.)

**ஔவை :** சிவபூசையிற் கரடி புகுந்தது போல, நீங்கள் அரசியல் சம்பந்தமாக ஏதோ ஆலோசனை செய்துகொண்டிருக்கும் போது நான் வந்து சேர்ந்தேன்! நீங்கள் பேசுங்கள். நான் பிறகு வருகிறேன்.

**அதிய :** அம்மையீர், நீங்கள் போக வேண்டா. நீங்கள் வாராதிருப்பினும், நாங்கள் உங்களை வரவழைத்திருப்போம். பழம் நழுவிப் பாலில் விழுந்தது போல, நீங்களே வந்துவிட்டது

நலமாயிற்று! அம்மையீர், நீங்கள் எனக்கு ஓர் உதவி செய்ய வேண்டும். கோபிக்கக் கூடாது!

**ஔவை:** கோபமேன்! அரசனுகிய உனக்கு எளியேனுல் ஆகத்தக்கது எதுவானுலும், செய்யக் காத்துக்கொண்டிருக்கிறேன்.

**அதிய:** காஞ்சிபுரத்தை ஆண்டு வரும் தொண்டைமான் என்மீது போர் தொடுக்கப் படை திரட்டுகிருனும்!

**ஔவை:** ஆம், உண்மைதான். நானும் கேள்விப்பட்டேன். 'கெடுவான் கேடு நினைப்பான்,' என்பது போல, அவனது கெட்டகாலம் அவனை அவ்வாறு செய்யத் தூண்டுகிறது. விரைவில் அதன் பயனை அவன் அறிவான்!

**அதிய:** உண்மைதான். ஆனுல்..........

**ஔவை:** ஆனுல், என்ன?

**அதிய:** எனக்குப் போர் செய்வதில் இப்போது விருப்பமில்லை. போர் நடந்தால், எண்ணற்ற வீரர் மடிவர்! இருவர் நாடுகளுக்கும் பெருத்த நஷ்டம் ஏற்படும்! ஆதலால், அவனிடம் உங்களைத் தூது அனுப்பி, அவனுக்கு எனது படை வலியை விளக்கினுல், அவன் போரைத் தவிர்க்கக் கூடும். என்ன சொல்கின்றீர்?

**ஔவை:** இதற்கு ஏன் யோசனை? உன் விருப்பத்தை மகிழ்ச்சியுடன் நிறைவேற்றுவேன்! இதோ புறப்படுகிறேன்!

[புறப்படுகின்ருர். அரசனும் அமைச்சனும் பின் சென்று வழி விடுகின்றனர்.]

[திரை]

## காட்சி—3

இடம் : காஞ்சீபுரத்தில் தொண்டைமான் அரண்மனை
காலம் : முற்பகல்
பாத்திரங்கள் : தொண்டைமான், அமைச்சன், ஔவையார் முதலியவர்.

[தொண்டைமான் சபையில் இருக்கிருன். அமைச்சர் முதலியவர் அருகில் இருக்கின்றனர்.]

**தொண்டைமான் :** அமைச்சரே, பிரதானிகளே, தகடூரின்மீது படையெடுக்க எல்லா ஏற்பாடுகளும் முடிந்துவிட்டனவா ?

**அமைச்சன் :** மன்னரே, எல்லாம் முடிந்துவிட்டன. ஆனல், இன்றைய ஏழாம் நாள்தான் படை புறப்படுவதற்கு நல்ல நாள் என்று சோதிடர் கூறியிருக்கின்ருர்.

**தொண் :** ஆம் ! நினைவிருக்கின்றது ! (காவலன் வருகிருன்.) காவல, என்ன சேதி ?

**காவலன்:** பெருமானே, வணக்கம் ! ஔவையார் என்னும் அருந்தமிழ்ப் புலவர் உங்களைக் காண வந்திருக்கின்ருர்.

**தொண் :** ஔவையாரா ! நல்லது ! அழைத்து வா ! (காவலன் போகின்ருன்.) அமைச்சரே, ஔவையார் அதியமான் அரண்மனையில் இருப்பதாகக் கேள்விப்பட்டேன். அவர் ஏன் இன்று இங்கு வந்தார் ?

**அமைச் :** ஏதேனும் காரணம் இருக்கலாம், சமாதானம் பேச வந்திருக்கலாம். அல்லது,

நமது படை வலியை அறிந்து செல்ல வந்திருக்கலாம்.

**தொண் :** உண்மைதான். வந்த காரணம் எதுவாயினும், ஔவையார் பெரும்புலவர். அவருக்கு நல்வரவு கூறி உபசரிக்க வேண்டுவது நமது கடமை.

**அமைச் :** அவர் வந்ததும் ஒரு வகையில் நலமே. அவருக்கு நமது ஆயுதச் சாலையைக் காட்டினுல், அதன் பெருமையை அவர் அதியமானுக்குக் கூறட்டுமே! (ஔவையார் வருகின்ருர். அனைவரும் எழுந்து நின்று வணங்குகின்றனர்.)

**தொண் :** அருந்தமிழ் வல்ல அம்மையீர், வாரும்! (ஒரு பீடத்தைக் காட்டி) இதில் அமரும்!

**ஔவை :** தொண்டை நாட்டு மன்னனே, வாழ்க உன் அரசு!

**தொண் :** அம்மையீர், உங்கள் புலமையைப் பற்றி அடிக்கடி பலர் சொல்லக் கேட்டிருக்கிறேன்! உங்களைக் காண வேண்டும் என்னும் ஆவல் நெடுங்காலமாய் எனக்குண்டு! உங்களைக் காணும் பேறு இன்றுதான் கிடைக்கப் பெற்றேன்! மிகவும் மகிழ்ச்சி! நீங்களும், சுற்றமும் நலந்தானே!

**ஔவை :** அரசனே, உனது பெருமையைப் பற்றி யானும் கேள்விப்பட்டிருக்கிறேன். உன்னைக் காண வேண்டுமென்னும் ஆவல் என்னை இன்று இங்குக் கொண்டு வந்தது. யானும், என் சுற்றமும் நலமே.

**தொண் :** நெடுந்தொலைவு நடந்து வந்திருக்கின்-றீர் ! உணவு கொண்ட பின் பேசலாம். எழுந்-திரும். (எழுந்திருக்கிறான். எல்லாரும் எழுகின்றனர்.)

**[திரை]**

**காட்சி—4**

**இடம் :** தொண்டைமானது ஆயுதச் சாலை
**காலம் :** பிற்பகல்
**பாத்திரங்கள் :** தொண்டைமான், ஔவையார்.

*[தொண்டைமானும் ஔவையாரும் தொண்டைமானது ஆயுதச் சாலையுள் நிற்கின்றனர்.]*

**தொண் :** அம்மையீர், இதுவரையில் எனது அரண்மனையின் பல பாகங்களையும் பார்த்தீர்-கள். இது எனது ஆயுதச் சாலை. இதையும் பாருங்கள்.

**ஔவை :** ஆ ! என்ன அழகு ! எவ்வளவு ஒழுங்கு! போர்க் கருவிகளை இப்படியல்லவா வைத்தி-ருக்க வேண்டும்! எல்லாம் புதியவை! கொல்லன் உலையிலிருந்து இப்போதுதான் வந்தன போலும்! ஒவ்வொன்றுக்கும் பூ மாலையா ! ஒவ்வொன்றுக்கும் பீலியா ! இவற்றின் ஒளி கண்ணைப் பறிக்கின்றதே ! துருப்பிடியாதிருக்க எல்லாவற்றிற்கும் நெய் பூசியிருக்கிறதே ! ஆ ! என்ன நேர்த்தி !

**தொண் :** அம்மையீர், என்ன இப்படி ஆச்சரியப்-படுகின்றீர்கள்! இதற்குமுன் நீங்கள் அரசர்க-ளுடைய ஆயுதச் சாலைகளைப் பார்த்ததே இல்-லையோ ? ஏன் ? அதியமானது ஆயுதச்சாலை-யைப் பார்த்திருப்பீர்களே !

**ஔவை :** பார்த்திருக்கிறேன். அதியமான் தனது ஆயுதச் சாலையில் என்ன வைத்திருக்கிறான்! அங்கு ஒன்றும் இல்லை. அவனுடைய போர்க்கருவிகள் இப்படியா இருக்கின்றன! அவை முனை முரிந்தும், பிடி உடைந்தும், இரத்தக் கறை படிந்தும் கொல்லன் உலையிற்கிடக்கின்றன! உன் கருவிகள் கண்ணைப் பறிக்கின்றனவே!

**தொண் :** அம்மையீர், நீங்கள் கூறுவதன் பொருள் என்ன? நீங்கள் என்னுடைய கருவிகளைப் புகழ்கின்றீர்களா, இகழ்கின்றீர்களா?

**ஔவை :** மன்ன, நான் கூறுவது உண்மை. இதிற் புகழ்ச்சியும் இல்லை, இகழ்ச்சியும் இல்லை. உனது ஆயுதச்சாலையில் உள்ள கருவிகள் போரையே காணாமையால், மெருகு மாறாமல், உருக்குலையாமல் இருக்கின்றன. அதியமானுடைய கருவிகள், பகைவர் உடலைக் குத்திக்குத்தி இரத்தக் கறை படிந்தும், முனை முரிந்தும், கைப்பிடி உடைந்தும், பழுது பார்ப்பதற்காகக் கொல்லன் உலையில் கிடக்கின்றன! இதுதான் உண்மை.

**தொண் :** அம்மையீர், நீங்கள் கூறுவதன் பொருளை அறிந்தேன்! அதியமான் பல போர்களைப் புரிந்து அனுபவம் படைத்தவன் என்பது உண்மையே. அதியமானைப் போல நான் போர் புரிந்ததில்லை என்பதும் உண்மையே. ஆதலால், நான் அவனை எதிர்ப்பது அடாது. வாருங்கள், போகலாம்.

**[திரை]**

### அருஞ்சொற்பொருள் :

அரண்மனை—அரசன் வசிக்கும் பாதுகாப்புள்ள மாளிகை, பாவலர்-புலவர், பரிசு—வெகுமதி, காவலன்—காவற்காரன், ஒப்பற்ற—நிகரில்லாத, பாணர்—ஒரு சாதியார், ஐயமற—சந்தேகம் நீங்க, சுவை—உருசி, இருங்கள்— உட்காருங்கள், அளிக்கின்றது—தருகின்றது, பேறு-பலன், ஆசி — ஆசிர்வாதம், நலம் — சுகம், தொலைவு—தூரம், களைப்புற்று—சோர்வடைந்து, காலம் தாழ்த்தாமல்—நேரத்தை நீட்டிக்காமல், புகட்ட வேண்டும் — கற்பிக்க வேண்டும், வலி—பலம், படை—சேனை, ஒப்பிட்டு—சீர்தூக்கி, பீடம்-ஆசனம், போர் தொடுக்க—சண்டை செய்ய, தவிர்த்தல்-விடுதல், நிறைவேற்றுகிறேன்-முடிக்கிறேன், அமைச்சன்—மந்திரி, ஆவல்—ஆசை, சுற்றம்—உறவு, நேர்த்தி—அழகு, பீலி-மயில், இறகு, அடாது—பொருந்தாது.

### பயிற்சி :

**1. விடை எழுது :—**

அ. அதியமான் ஆண்ட நகரம் எது? அது எங்குள்ளது?

ஆ. ஔவையார் எவற்றிற்சிறந்து விளங்கினார்?

இ. ஔவையார் அதியமானை என்ன கூறி வாழ்த்தினார்?

ஈ. ஔவையார் ஏன் தொண்டைமான் சபைக்குச் சென்றார்?

உ. ஔவையார் தொண்டைமானுடைய ஆயுதச் சாலையைக் கண்டு கூறியவை என்ன?

ஊ. அவர் கூறியதன் பொருள் என்ன?

**2. இவற்றைத் தெரிந்துகொள் :—**

ரகர—றகர வேற்றுமை :

பரவை—'கடல்' என்னும் பொருளது.
பறவை—'பட்சி' என்னும் பொருள் பெறும்.

பரி—குதிரை என்பது பொருள்.
பறி—பிடுங்கு என்பது பொருள்.—மலர் பறித்தான்.

பாரை—கடப்பாரை என்னும் பொருள் பெறும்.
பாறை—கற்பாறை என்னும் பொருள் பெறும்.

3. ஒவ்வொரு வாக்கியத்தையும் கீழ்க் குறித்தபடி பிரித்து இரண்டிரண்டு வாக்கியங்களாக்கு :—

உதாரணம் : சேர நாட்டைச் சேர்ந்த தகடூரை அதியமான் ஆண்டுவந்தான்.

அ. சேர நாட்டைச் சேர்ந்தது தகடூர்.

ஆ. அதை அதியமான் ஆண்டுவந்தான்.

பிரித்தற்குரிய வாக்கியங்கள் :—

அ. தங்களைக் காண விரும்பி ஔவையார் வந்திருக்கிறார்.

ஆ. ஔவையார் பாணர் குலத்திற் பிறந்து, ஆடுவதிலும் யாழ் இசைப்பதிலும் தேர்ச்சி பெற்றார்.

இ. ஔவையார் தமிழை ஐயமறக் கற்றுப் பாடல் இயற்றுவதில் வல்லவரானார்.

ஈ. இத்தனை சிறப்புக்கும் இருப்பிடமாகிய இவர் நமது நாட்டிற்பிறந்தவர்.

## இலக்கணம்.

### எழுத்து—வகைகள் (தொடர்ச்சி)

இவற்றைப் படி :—

அப்பம்—அவன்—அப்பையன் (அ+பையன்)
இலை—இவள்—இப்பெண் (இ+பெண்)
உறி—உவன்—உவ்வீடு (உ+வீடு)

'அவன்' என்னும் சொல்லில் உள்ள அ என்னும் எழுத்து, சுட்டுப் பொருளில் வந்துள்ளது. 'அப்பம்' என்னும் சொல்லில் உள்ள அ என்னும் எழுத்து அவ்வாறு சுட்டவில்லை. சுட்டுதல்-குறித்தல்.

இவள், உவன் என்னும் சொற்களில் உள்ள இ உ என்னும் எழுத்துக்களும் சுட்டுப் பொருளில் வந்துள்ளன. ஆதலால், அ, இ, உ என்பவை சுட்டுப் பொருளை உணர்த்தினால் சுட்டெழுத்துக்கள் எனப்படும், இவை சொல்லின் அகத்தே (உள்ளே) நிற்பதால், அகச்சுட்டு எனப்படும்.

அப்பையன், இப்பெண், உவ்வீடு என்னும் சொற்களில் உள்ள **அ, இ, உ** என்னும் எழுத்துக்களும் **சுட்டுப்**பொருளை உணர்த்துகின்றன. இவை சொல்லுக்குப் **புறத்தே** (வெளியே) நிற்பதால், **புறச்சுட்டு** எனப்படும்.

**மனப்பாடம் செய் :**

அ, இ, உ என்னும் எழுத்துக்கள் சுட்டுப் பொருளை உணர்த்தினால் சுட்டெழுத்துக்கள் எனப்படும். இவை சொல்லின் அகத்தே நின்றால், அகச்சுட்டு எனவும், சொல்லுக்குப் புறத்தே நின்றால், புறச்சுட்டு எனவும் வழங்கப்படும்.

---

## 8. மழை

(பாட்டு)

சோழனது சீமையிலே சொரிந்தது நல்லமழை !
நல்லமழை பெய்ததனால் நாடுசெழித்ததப்பா !
பூமி குளிர்ந்ததுவே; பொய்கைகள் நிரம்பினவே ;
ஏரிகள் நிரம்பினவே ; எதிர்த்ததே ஏகவெள்ளம் ;
ஆறுகள் நிறைந்தனவே ; அணைகள் அழிந்தனவே ;
குளங்கள் நிரம்பினவே ; குதித்தன மீன்களெல்லாம் ;
தருக்கள் தளிர்த்தனவே ; தாமரைகள் பூத்தனவே ;
வயல்கள் நிரம்பினவே ; வாய்க்கால் வழிந்தனவே ;
செடிகள் கொடிகளெல்லாம் செழித்துத் தளிர்த்தனவே ;
செந்நெல் விளைந்ததுவே ; தேசம் செழித்ததுவே ;
பயிர்கள் விளைந்தனவே ; பலனைக் கொடுத்தனவே ;
வயலைஉழும் மக்களெலாம் வாழ்த்திமழைப் பொங்கல் இட்டார்.

— அல்லி அரசாணிமாலை

# 9. கதைப் படம்

குறிப்பு :—படத்தைப் பார்த்துக் கதையைச் சொல்லச் செய்தல் :



# 10. செய்தித் தாள்கள்

(உரையாடல்)

**தமிழரசி :** அப்பா, சிற்றுண்டி சாப்பிட வாருங்கள்.

**தந்தையார் :** இதோ வருகிறேன். இப்பத்திரிகையில் இன்னும் ஒரு பக்கந்தான் இருக்கிறது. அதைப் படித்துவிட்டு வந்துவிடுகிறேன்.

**தமி :** இந்தப் பத்திரிகையில் என்னப்பா இருக்கிறது? தினந்தோறும் காலையில் இதைத் தவருமல் படிக்கிறீர்களே!

**தந் :** நீ பத்திரிகை படித்தால் அல்லவா தெரியும்! எப்போது பார்த்தாலும் கதைப் புத்தகங்களையே படித்துக்கொண்டிருக்கிருய்!

**தமி :** பத்திரிகையில் சிறுமியாகிய நான் படிப்பதற்கு என்ன இருக்கிறது? பத்திரிகைகள் பெரியவர்களுக்குத்தானே பயன்படும்?

**தந் :** தமிழரசி, நீ எண்ணுவது தவறு. பத்திரிகைகளில் எல்லா வயதினர்க்கும் ஏற்ற செய்திகள் உண்டு. நீ இப்பத்திரிகையைப் புரட்டிப்பார். ஒவ்வொரு பக்கத்திலும் உள்ள தலைப்புக்களைக் கவனி. உனக்கு இன்பம் அளிக்கக் கூடிய எத்தனையோ செய்திகள் கிடைக்கின்றன பார்.

**தமி :** நான் படிக்கத் தொடங்குமுன் என்னுடைய ஐயங்களை விளக்கிவிடுங்கள். பிறகு படிக்கிறேன்.

**தந் :** சரி. உனது விருப்பப்படியே செய்வேன். உன் ஐயங்களை ஒவ்வொன்ருகச் சொல்லிக்கொண்டே வா.

தமி: பொதுவாகப் பத்திரிகைகளில் என்னென்ன செய்திகள் வெளியாகும்?

தந்: பத்திரிகைகள் பல வகைப்படும். அவை **தினத்தாள், வாரத்தாள், பக்ஷத்தாள், மாதத்தாள்** என்பவை. அவற்றுள் தினத்தாளைத் தவருமற் படித்தால், உலகில் அவ்வப்போது என்ன என்ன நடைபெறுகின்றன என்பதை அறிய முடியும். அதனுல், உனது உலக அறிவு வளரும். பொதுவாகத் தினசரிப் பத்திரிகைகளில் வெளியாகும் செய்திகள் நம் நாட்டுச் செய்திகள், அயல் நாட்டுச் செய்திகள் என இரு பிரிவினவாம். ஒரு நாட்டுச் செய்திகளை **அரசியற் செய்திகள், சமூகச் செய்திகள், வாணிகச் செய்திகள், விளையாட்டுச் செய்திகள்** என நான்கு பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

தமி: அரசியற்செய்திகள் எதைப்பற்றிக் கூறும்?

தந்: ஒரு நாட்டின் ஆட்சி சம்பந்தமாக அரசியலாரும், அரசியல் கட்சித் தலைவர்களும், பொது மக்களும் செய்துவருவதையும் பேசிவருவதையும் அரசியற்செய்திகள் அறிவிக்கும்.

தமி: சமூகச் செய்திகள் என்பவை யாவை?

தந்: கல்வி வளர்ச்சி, சுகாதார வளர்ச்சி போன்ற சமூக முன்னேற்றத்துக்குரிய விஷயங்களைச் சமூகப் பகுதி தெரிவிக்கும். பள்ளிகளில் நடைபெறும் சிறப்பு விழாக்கள் போன்ற செய்திகளும் இத்தலைப்பின்கீழ் வெளியாகும்.

தமி: வாணிகப் பகுதியில் என்னென்ன செய்திகள் வெளியாகும்?

**தந் :** பொன், வெள்ளி, தானியங்கள், மற்ற உணவுப் பொருள்கள், பருத்தி, நிலக்கடலை முதலியவை-களின் இருப்பும், அவற்றின் விலைகளும் வாணி-கப் பகுதியில் குறிக்கப்படும். அன்றியும், வியாபாரிகள் தங்களிடம் உள்ள வாணிகச் சரக்குகளை விற்பனை செய்வதற்கு விளம்பரம் அவசியம். ஆதலால், அவர்கள் தங்களிடம் உள்ள பொருள்களின் மேன்மையையும், அவற்றின் நயமான விலையையும் குறைந்த செலவில் பொது மக்களுக்குப் பத்திரிகைகளில் விளம்பரங்களின் மூலம் அறிவிப்பார்கள்.

**தமி :** சரி. விளையாட்டுப் பகுதி என்று கூறினீர்-களே! அப்பகுதியில் என்ன செய்திகள் வெளி வரும் ?

**தந் :** ஒவ்வொரு நாட்டிலும் நடைபெறும் சிறந்த காற்பந்து, கிரிக்கெட்டு, டென்னிஸ், குஸ்தி, குத்துச்சண்டை, குதிரைப் பந்தயம் முதலிய போட்டிப் பந்தயங்களைப் பற்றிய விவரங்கள் அப்பகுதியில் வெளியாகும். நாடகம், நடனம் முதலிய கலைகளைப் பற்றிய செய்திகளும் அப்-பகுதியில் இடம் பெறும். அப்பகுதிகளுள் ஒவ்-வொன்றுக்கும் தனித்தனி பத்திரிகைகளும் உண்டு.

**தமி :** ஒவ்வொரு பகுதிக்கும் தனித்தனி பத்தி-ரிகையா ?

**தந் :** ஆம். கல்வி, சுகாதாரம், விளையாட்டு, விஞ்ஞானம், திரைப்படம் முதலியவற்றுள் ஒவ்வொன்றைப் பற்றிய செய்திகளை மட்டும் வெளியிடும் பத்திரிகைகளும் உண்டு. ஆனால்,

அவை தினசரிப் பத்திரிகைகளாக வெளி வருவதில்லை. வாரத் தாளாகவோ, பக்ஷத்-தாளாகவோ, மாதத் தாளாகவோ வெளிவரும்.

தமி: அப்பா, பத்திரிகையைப்பற்றி இது வரை எனக்கு ஒன்றும் தெரியாதிருந்தது. நீங்கள் சொல்லிய விஷயங்களைக் கேட்ட பிறகுதான் பத்திரிகைகளின் பெருமை எனக்கு விளங்கு-கிறது! இன்று முதல் நான் தினந்தோறும் பத்திரிகை படிப்பதை மறக்கமாட்டேன்!

**அருஞ்சொற்பொருள்:**

சிற்றுண்டி–பட்சணம், சிறுமி-சிறுபெண், புரட்டி-திருப்பி, இன்பம்-மகிழ்ச்சி, தொடங்கு–ஆரம்பி, தினத்தாள்–தினந் தோறும் வெளியாகும் பத்திரிகை, சம்பந்தம்-தொடர்பு, அறி விக்கும்-தெரிவிக்கும், விளம்பரம்-அறிவிப்பு, பக்ஷம்-பதினைந்து நாள் கொண்ட காலம்.

**பயிற்சி:**

1. **விடை எழுது:—**

அ. பத்திரிகை படிப்பதால் ஏற்படும் பயன் யாது?

ஆ. அரசியற் பகுதியில் என்னென்ன விஷயங்கள் வெளி-யாகும்?

இ. சமூகப் பகுதியில் வெளியாகும் விஷயங்கள் யாவை?

ஈ. வாணிகப் பகுதியில் வெளியாகும் விஷயங்கள் எவை?

உ. விளையாட்டுப் பகுதி எவ்விஷயங்களைத் தெரிவிக்கும்?

ஊ. பத்திரிகைகள் எத்தனை வகைப்படும்? அவை யாவை?

2. **கீழ்வரும் வாக்கியங்களைத் திருத்து:—**

அ. பத்திரிகை தினந்தோறும் படிப்பதற்குரியவை.

ஆ. பத்திரிகைகளில் பல வகையான் செய்திகள் வெளி யிடும்.

இ. பத்திரிகைகளில் வியாபாரிகளைத் தங்கள் வாணிக விளம்பரங்களை வெளியிடுவார்கள்.

ஈ. பத்திரிகை படியாவிடில் உலக சமாசாரங்களுக்கு அறிய முடியாது.

3. கோட்டைத் தக்க சொல்லால் நிரப்பு :—

அ. நான் படுப்பதற்கு ஒரு———வாங்கினேன்.
(தலையணை, போர்வை, பாய்)

ஆ. மீனை ——இட்டான்.
(மடியில், முறத்தில், பறியில்)

இ. 'உனக்குத் தெரியுமா?' என்று அவன் ——
(சொன்னான், வினவினான், உரைத்தான்)

ஈ. கல்வி———இல்லாதது.
(எல்லை, விஸ்தீரணம், அழகு).

## இலக்கணம் :

### எழுத்து—வகைகள் (தொடர்ச்சி)

**இவற்றைப் படி :—**

எலி எது? அவனா (ன்+ஆ) செய்தான்?
ஏணி ஏது? அவளோ (ள்+ஓ) பாடினாள்?
யானை யாருடையது?

எது, ஏது, யாருடையது என்னும் சொற்களின் முதலில் உள்ள எ, ஏ, யா என்னும் எழுத்துக்கள் வினாப் (கேள்வி) பொருளில் வந்திருக்கின்றன.

எலி, ஏணி, யானை என்னும் சொற்களில் உள்ள எ, ஏ, யா என்னும் எழுத்துக்கள் வினாப் பொருளைக் குறிக்கவில்லை.

அவனா, அவளோ என்னும் சொற்களின் ஈற்றில் (கடைசியில்) உள்ள ஆ, ஓ என்னும் எழுத்துக்களும் வினாப் பொருள் தருவதைக் கவனி.

**மனப்பாடம் செய் :**

**எ, ஏ, யா என்னும் எழுத்துக்கள் சொல்லுக்கு முதலில் நின்றும், ஆ, ஓ என்னும் எழுத்துக்கள் சொல்லின் ஈற்றில் நின்றும் வினாப்பொருளைத் தருமாயின், அவை வினாவெழுத்துக்களாம்.**

# 11. பத்திரிகைச் செய்தி—I

## (மனத்துட்படித்தல்)

[குறிப்பு :—கீழ்வரும் செய்தியை மனத்தினுள்ளேயே படித்துச் செய்தியின் பின்னே தரப்பட்டுள்ள வினாக்களுக்கு விடை எழுத வேண்டும்.]

### பாரத தேவி

### 24—8—52 நந்தனஞூ ஆவணிமீ 9உ

### ஐந்தாம் தமிழ் விழா

சென்னைத் தேனாம்பேட்டையில் வெள்ளி-யன்று ஆரம்பமான ஐந்தாம் தமிழ் விழா மிக வெற்றிகரமாக நடந்தேறி வருவது தமிழக அன்பர்களுக்கு மட்டுமேயன்றி, மொழி வளர்ச்சியில் சிரத்தை கொண்ட யாவர்க்கும் பெருமகிழ்ச்சி அளிக்கும் மகத்தான சம்பவமாகும். வெள்ளியன்று காட்சிச் சாலையைத் திறந்து வைத்த **டாக்டர் சுப்பராயன்**, பண்டைத் தமிழ்க் கலையின் மாண்பை விளக்கி, தமிழ் மொழியும் கலையும் பிற நாடுகளில் பரவி ஜயக்கொடி நாட்டியதைக் குறிப்பிட்டு, "நம்மவர்கள் நாடு பிடிக்கும் ஆசையுடன் வெளி நாடுகளில் குடியேறவில்லை. நம் நிகரற்ற நாகரிகத்-தைப் பரப்பவும், பிற நாகரிகங்களின் உட்போக்-கைத் தெரிந்துகொள்ளவுந்தான் சென்றார்கள்," என்று சொல்லிப் பழந்தமிழ்ப் பெரியோர்களின் சேவையைப் பாராட்டினர்.

இந்தத் தமிழ் விழாவுக்குச் சென்னை நகரமே திரண்டெழுந்து வரும்படி உற்சாகமூட்டிய பெருமை **தமிழ் வளர்ச்சிக் கழகத்தைச்** சாரும். அழகாக அலங்கரிக்கப்பட்ட கம்பீரமான யானை

மீது தமிழ்ச் சுவடிகளை வைத்து, சென்னையின் முக்கியத் தெருக்கள் வழியாகப் பவனி சென்று, தமிழ் விழாவின் சிறப்பை மக்கள் நன்கறியும்படி செய்த வரவேற்புக் கழகத்தாரின் ஏற்பாடுகள் பாராட்டத் தக்கவையாகும்.

இனிய தமிழின் இரு கண்களாய் விளங்குவன அறிவும் அன்புமாகும். இவற்றின் சிறப்பை மகா-நாட்டு வரவேற்புக் கழகத் தலைவர் **திரு. எம். பக்தவற்சலமும்**, மகாநாட்டை ஆரம்பித்துவைத்த சென்னை முதன் மந்திரியார் **திரு. சக்கரவர்த்தி ராஜகோபாலாசாரியாரும்**, மகாநாட்டில் தலைமை தாங்கிய **திரு. வி. கலியாணசுந்தரனர்** அவர்களும் மிக அழகாக, அவரவர்கள் பிரசங்கங்களில் விளக்-கிக் காட்டினர்கள். இதர மாகாணங்களில் காணப்-படும் பாஷைப் பித்து, பிறரை அடக்கியாளவேண்டு-மென்ற ஆணவம் எள்ளளவும் நம் தலைவர்களின் பேச்சுக்களில் இல்லை. இதற்கு மாருக, அன்பும், அறிவும், ஹாஸ்யமும், தெய்வபத்தியும், வினயமும், இலக்கிய அழகும், ஓவியச் சிறப்பும் இப்பிரசங்கங்-களில் விளங்குகின்றன.

"தமிழ் இலக்கியங்களின் உயர்வு, தமிழ்க் கலை-யின் மேன்மை, தமிழ் நாகரிகத்தின் சிறப்பு ஆகிய-வற்றை நாம் அறியவும்? மற்ற நாட்டு மக்களுக்கு எடுத்துக் கூறவும் இத்தகைய விழாக்கள் பயன்பட வேண்டும். தமிழ் விழாக் கொண்டாடுகிறோம் என்ருல், மற்ற மொழிகளை வெறுக்கிறோமென்-பதோ, பழிக்கிறோம் என்பதோ பொருள் அல்ல என்பதை மிகத் தெளிவாகக் கூற விரும்புகிறேன்," என்று **திரு. பக்தவற்சலம்** கூறினர்.

தமிழ் விழாவில் தலைமை வகித்த **திரு. வி. க.**, தமிழின் பண்டைய அருமை பெருமைகளை விரித்-

துக் கூறியதுடன் நிற்கவில்லை. "**உலகம் உடல்; இந்தியா உள்ளம்; தமிழ் உயிர்,**' என்று கூறினார். அவர், 'பழந்தமிழ்க் காலத்திலிருந்து பாரதியார் காலம் வரை தமிழின் இயல்பு என்ன? அன்பு! அன்பு! அன்பு! அன்பே அறம். அன்பில் ஊன்றி ஊன்றி, ஒன்றி ஒன்றிச் சென்றால், கடவுள்பால் செல்வோம். அன்பின் முதிர்ச்சியே கடவுள்,'' என்று திரு. வி. க. உபதேசித்திருப்பது ஜடநாகரிகத்தில் மூழ்கி, மனிதரை மனிதர் பிடுங்கித் தின்று, எளியாரை வலியார் சுரண்டி உண்பதையே வாழ்வின் இலட்சியமாகக் கொண்ட பேய்களான கள்ள வியாபாரக் கூட்டத்தினருக்குச் சிறந்த உபதேசமாகும். அவர், "சுதந்தரம் தழைக்க வேண்டுமானால், சகோதர அன்பும், சமத்துவப் பற்றும் எங்கும் பரவ வேண்டும். அப்பொழுதுதான் காந்திஜி கனவு கண்ட அன்பு இராச்சியம் உதிக்கும். அப்பொழுதுதான் ஜனநாயக ஆட்சி வெற்றி பெறும்,'' என்று கூறினார்.

**வினாக்கள்:**

1. இச்செய்தி எப்பத்திரிகையில், எந்தத் தேதியில் வெளியாயிற்று?
2. இச் செய்தி எந்த நிகழ்ச்சியை விவரிக்கிறது?
3. கண் காட்சியைத் திறந்து வைத்தவர் யார்? அவர் கூறிய முக்கிய விஷயம் என்ன?
4. மகாநாட்டுக்குத் தலைமை தாங்கியவர் யார்?
5. மகாநாட்டு வரவேற்புக் கழகத் தலைவர் யார்?
6. மகாநாட்டைத் திறந்து வைத்தவர் யார்?
7. திரு. பக்தவற்சலம் கூறியது யாது?
8. திரு. வி. க. அவர்கள் உலகம், இந்தியா, தமிழ் ஆகியவற்றை எவ்வெவற்றிற்கு ஒப்பிட்டார்?
9. திரு. வி. க. அவர்கள் கடவுள் என்பதை யாதெனக் கூறுகிறார்?
10. சுதந்தரம் தழைப்பதற்குத் திரு. வி. க. அவர்கள் கூறும் மார்க்கங்கள் யாவை?

## 12. மகாபாரதம்

1. **மகாபாரதம்**, **இராமாயணம்** என்னும் இரண்டு நூல்களும் **இதிகாசங்கள்** எனப் பெயர் பெறும். 'இதிகாசம்' என்பது, நற்குணங்கள் நிறைந்த பெரியாரின் வரலாற்றையும் சிறந்த நீதிகளையும் கூறுகின்ற பழமையான நூலாகும். மகாபாரதமும், இராமாயணமும் முதன்முதல் **சம்ஸ்கிருதம்** எனப்படும் வடமொழியில் இயற்றப்பட்டவை. பின்னர், அவை வேறு மொழிகளிலும் இயற்றப்பட்டன. நமது தமிழ் மொழியிலும் அந்நூல்கள் இருக்கின்றன. அவற்றைப்பற்றிய முக்கியச் செய்திகளை இப்பாடத்தால் அறியலாம்.

2. '**பாரதம்**' என்பது பரத வமிசத்தவர் வரலாற்றைக் கூறும் நூலாதலால், அப்பெயர் பெற்றது. **துரியோதனன்** முதலிய **கௌரவர்** நூற்றுவர்க்கும், தருமர் முதலிய **பாண்டவர்** ஐவர்க்கும் இராச்சியம் காரணமாக நிகழ்ந்த சச்சரவுகளையும் போரையும் விவரிக்கின்றது பாரதம். இது மிகப் பெரிய நூலாதலால், '**மகாபாரதம்**' என்று வழங்கப்படுகிறது. இதனை முதன்முதல் **வியாசமுனிவர்** வடமொழியில் இயற்றினார்.

3. பாரதக் கதையை முதன்முதல் தமிழில் இயற்றியவர் **பெருந்தேவனார்** என்பவர். அவர் கடைச்சங்க காலத்தில் வாழ்ந்தவர். அவர் இயற்றிய நூல் முழுவதும் நமக்குக் கிடைக்கவில்லை. சுமார் ஐந்நூறு ஆண்டுகளுக்குமுன் வியாச பாரதத்தைத் தழுவி **வில்லிபுத்தூர் ஆழ்வார்** என்பவர் தமிழில் பாரதம் இயற்றினார். வியாச பாரதம்

பதினெட்டுப் பருவங்கள் கொண்டது. **வில்லி-பாரதம்** முதல் பத்துப் பருவங்களை மட்டும் கூறுவது. வில்லிபுத்தூராழ்வார் காலத்துக்குப் பிறகு, அவர் தமிழில் இயற்றுமல் விட்ட எட்டுப் பருவங்களையும் **அரங்கநாத கவிராயர்** என்பவர் தமிழில் இயற்றினுர். அன்றியும், **நல்லாப் பிள்ளை** என்பவர் வில்லிபுத்தூராழ்வார் பாடிய பாட்டுக்-களையும் சேர்த்துக்கொண்டு, அவர் பாடாமல் விட்ட பகுதிகளைத் தாம் பாடி மிகப் பெரிய நூலாகச் செய்தார். அது '**நல்லாப் பிள்ளை பாரதம்**' என்று வழங்கி வருகிறது.

4. தமிழில் **இத்தனை** பாரதங்கள் இருந்தா-லும், வில்லிபுத்தூராழ்வார் இயற்றிய பாரதமே அறிஞரால் பாராட்டப்படுகின்றது. இதற்குக் காரணம், வில்லிபாரதம் சொல் அழகு, பொருள் நயம், ஓசை இன்பம் ஆகியவற்றில் சிறந்து விளங்-குவதேயாகும். இதில் வடமொழிச் சொற்கள் மிகுதியாய் உண்டு. ஆயினும், பாட்டுக்கள் படிப்-பதற்கு இன்பமாயிருக்கும்.

5. வில்லிபுத்தூராழ்வார் பெண்ணையாறு பாயும் **திருமுனைப்பாடி நாட்டில் சனியூரில்** பிறந்-தார். இவர் பிராமண குலத்தவர்; **வைணவ** சமயத்தவர். **வீரராகவாசாரியார்** என்பது இவர் தந்தையாரின் பெயர். இவர் இளமையிலேயே வடமொழியையும் தமிழையும் நன்கு பயின்று, தமிழிற் பல வகைப் பாக்களும் இயற்றும் திறமை பெற்றுர். இவர் புலவர் பலரை வாதில் வென்று விருது பெற்று விளங்கினுர்.

6. இவர் காலத்தில் **வக்கபாகை** என்ற நகரை **வரபதி ஆட்கொண்டான்** என்ற சிற்றரசன் ஆட்சி புரிந்தான். அவன் வில்லிபுத்தூராழ்வாரின் தமிழ்ப் புலமை பற்றிக் கேள்வியுற்று, அவரை வரவழைத்துத் தன் அவைப் புலவராக அமர்த்திக்கொண்டான். அவனுடைய வேண்டுகோளுக்கு இணங்கியே வில்லிபுத்தூரர்ழ்வார் பாரதத்தை இயற்றினுர் என்பது கூறப்படுகிறது.

7. வில்லிபுத்தூராழ்வார் பாரதம் இயற்றியதற்கு வேருெரு வரலாறும் கூறப்படுகின்றது: வில்லிபுத்தூராழ்வாரின் தந்தையார் இறந்த பிறகு, அவருக்கும் அவர் தம்பியாருக்கும் தாய பாகம் காரணமாகச் சச்சரவு ஏற்பட்டது. இருவரும் தமது வழக்கை அரசனுக்கு அறிவித்தனர். அரசன் வில்லிபுத்தூராழ்வாரை நோக்கி, "நீர் பாரதத்தைத் தமிழிற்பாடி முடித்தால், உமது வழக்கை விசாரித்து நீதி வழங்குவேன்," என்று கூறினுன். வில்லிபுத்தூராழ்வாரும் அதற்கிணங்கிப் பாரதத்தைத் தமிழில் இயற்றத் தொடங்கினுர். இயற்றி வரும்போது, தாய பாகம் காரணமாகப் பங்காளிகள் போர் புரிந்து, துரியோதனுதியர் கிளையோடு மாண்ட செய்தி அவர் மனத்தை மாற்றியது. அவர் தமது பாகத்தையும் தம்பியாருக்கே கொடுத்துவிட்டு, அவரோடு மனமொத்து வாழ்ந்து வந்தார். அரசனும் தான் செய்த தந்திரத்தால் வழக்குத் தீர்ந்ததுமன்றி, சிறந்த தமிழ்ப் பாரதமும் தோன்றியது கண்டு மகிழ்ந்தான் என்பர்.

8. பாரதத்தை வில்லிபுத்தூராழ்வார் இயற்றியது குறித்து மற்ருெரு வரலாறும் வழங்கி வருகி-

றது: வில்லிபுத்தூராழ்வார் தமது கல்விச் செருக்கால் பல இடங்களுக்கும் சென்று, அங்கங்கிருந்த புலவர்களுடன் வாதிட்டு, அவர்களை வென்று, தோற்றவர்களின் காதுகளை அறுத்து வந்தார். அவர் **திருவண்ணமலை**யை அடைந்தபோது, அங்கு வாழ்ந்துவந்த **திருப்புகழ்** ஆசிரியரான **அருணகிரிநாத**ருடன் வாதிட்டுத் தோல்வியுற்றார். ஆனால், தோல்வியுற்ற வில்லிபுத்தூராழ்வாரை அருணகிரியார் ஒப்பந்தத்தின்படி காதை அறுக்காமல், "புலவீர், இது வரை நீர் செய்து வந்தது போல உமது வாழ்நாளை வீணாக்காதிர்; உமது கல்வித் திறத்தை உலகத்தவர்க்குப் பயன்படுத்தும். இன்று முதல் சிவதூஷணை செய்வதை விட்டுவிடும்," என்று கூறி, அவரைப் போகவிட்டார். அருணகிரியாரின் நல்லுரைப்படி வில்லிபுத்தூரார் பாரதத்தை இயற்றினார். இக்காரணம் பற்றியே வைணவராகிய இவர் இந்நூலில் சிவபெருமானைப் பல இடங்களில் புகழ்ந்து பாடியுள்ளார் என்பர்.

### அருஞ்சொற்பொருள்:

வரலாறு – சரித்திரம், பருவம் – நூலின் பெரும்பகுதி, பாராட்டப்படுகிறது–புகழ்ந்து பேசப்படுகிறது, பயின்று–கற்று, பாக்கள்–பாட்டுக்கள், வாதம்–சொற்போர், விருது–வெற்றிக்கு உரிய சின்னம், தாய பாகம்–பங்காளி பாகம், இணங்கி–ஒப்பி, கிளை - சுற்றத்தார், செருக்கு – கருவம், ஒப்பந்தம் – ஏற்பாடு, தூஷணை–வசை.

### பயிற்சி:

1. **விடை எழுது :—**

அ. 'இதிகாசம்' என்பது என்ன?

ஆ. பாரதம் என்னும் நூலுக்கு அப்பெயர் வழங்கக் காரணம் யாது?

இ. பாரதம் முதலில் யாரால் எழுதப்பட்டது? எம்மொழியில் எழுதப்பட்டது?

ஈ. பாரதத்தை முதன்முதல் தமிழில் எழுதியவர் யார்?

உ. வியாச பாரதத்துக்கும் வில்லி பாரதத்துக்கும் உள்ள வேற்றுமை யாது?

ஊ. வில்லிபுத்தூரார் பிறப்பிடம் எது? அவர் தந்தையார் பெயர் யாது?

எ. வில்லிபுத்தூராரை ஆதரித்தவர் யார்?

ஏ. வில்லிபுத்தூரார் பாரதம் எழுதியதற்குக் கூறப்படும் காரணங்கள் யாவை?

**2. இவற்றைத் தெரிந்துகொள் :—**

தமிழ்ச்சொற்களில் சில, உருவம் மாறுமல் பெயராகவும் வினையாகவும் வரும். அவ்வாறு வரும்போது பொருள் வேறுபடும். அவற்றுள் சில கீழே தரப்பட்டுள்ளன:

| சொல் | | பெயர்ப்பொருள் | | வினைப்பொருள் |
|---|---|---|---|---|
| அகல் | — | விளக்கேற்றும் அகல் | — | நீங்கு. |
| அகழ் | — | கோட்டை அகழி | — | தோண்டு. |
| அடி | — | முதல், பாதம் | — | அடி (த்தான்) |
| அடை | — | ஒரு வகை அப்பம் | — | சிறையில் அடை. |
| அணி | — | ஆபரணம் | — | தரித்துக்கொள், அலங்கரி. |
| அரை | — | பாதி, இடுப்பு | — | பொடியாக்கு, மா அரை. |
| அறை | — | சிறு வீடு | — | அடி கொடு, சொல். |

**3. இவற்றை அமைத்து வாக்கியங்கள் எழுது :—**

பழமையான, இயற்றினர், நிகழ்ந்தது, சச்சரவு, விவரி, தழுவி (பின் பற்றி என்னும் பொருள்), நல்லுரை.



## 13. திரு. வி. கலியாணசுந்தரனார்

1. இக்காலத்தில் தமிழன்னையின் தவப்புதல்வராய் விளங்குபவர் **திரு. வி. கலியாணசுந்தரனார்** அவர்கள். இவர் '**தமிழ்ப் பெரியார்**' என்றும், '**முதுபெரும்புலவர்**' என்றும் வழங்கப்படுகின்றார். **திரு. வி. க.** என்னும் எழுத்துக்களால் குறிக்கப்பெறும் தமிழ் ஒளியைப்பற்றிக் கேட்டறியாத தமிழர் எவரும் இரார் என்பது திண்ணம்.

2. நம் தமிழ்ப் பெரியாரின் தந்தையார் பெயர் **திருவாரூர் விருத்தாசல முதலியார்** என்பது; அன்னையாரின் பெயர் **சின்னம்மாள்.** இவ்வம்மையாரின் தவப்பயனாய் 1883-ஆம் ஆண்டில் செங்கற்பட்டு மாவட்டத்தைச் சேர்ந்த **துள்ளம்** என்னும் கிராமத்தில் நம் பெரியார் தோன்றினார். தக்க வயது வந்தவுடன் அவர் தந்தையாரே இவருக்குத்தமிழை-

யும் ஆங்கிலத்தையும் கற்பித்து வந்தார். பின்னர் இவர் இராயப்பேட்டை '**ஆரியன் பிரைமரி பாடசாலே**'யில் நான்காம் வகுப்பில் சேர்க்கப்பட்டார். அப்பள்ளி சரியாக நடைபெருமையால், இவர் **வெஸ்லியன் பள்ளி**யிற் சேர்க்கப்பெற்ருர் ; பள்ளி மாணவராய் இருந்தபோது வகுப்பில் முதலிடம் பெற்று விளங்கினுர். அன்றியும், இவர் மாணவர் அனைவரினும் உடல் பருத்து இருந்தார். ஆதலால், இவர் மாணவர்களால் '**பொதுக்கன்**' என வழங்கப்பட்டார். இவரது உடற்பருமனைக் குறைத்தற்பொருட்டு இவர் பெற்ருேர் இவருக்கு மருந்து கொடுத்துப் பத்திய உணவு கொள்ளச் செய்தனர். இவர் மருத்துவரின் கட்டுப்பாட்டை மீறி, உழுந்து வடையை உண்டதனுல், இவருடைய ஒரு கையும், ஒரு காலும் முடங்கின. இக்காரணத்தால், இவரது பள்ளிப் படிப்பு நான்காண்டுகள் தடைப்பட்டது.

3. நம் சுந்தரனுர் நான்காண்டுகள் பள்ளிக்குச் செல்லாவிடினும், அக்காலத்தில் அவருக்கு மல்லர் சிலரின் பழக்கமும், சிறிது சிலம்பப் பயிற்சியும் கிடைத்தன. அன்றியும், மாட்டுப் பந்தயம், குதிரைப் பந்தயம் முதலிய பொழுதுபோக்குக்களிலும் இவர் தமது காலத்தைச் செலவிட்டார். 'குடுகுடு' என்னும் உப்புக்குந்த விளையாட்டில் இவர் நிகரற்றவர்.

4. சுந்தரனுர் 1898ல் உடல் நலம் பெற்று மீண்டும் பள்ளியிற் பயிலத் தொடங்கினுர். ஆருண்டு காலம் படிப்பில் எவ்வித இடையூறுமின்றி முன்னேறினுர். இவர் பள்ளியில் எல்லா வகுப்புக்களிலும் முதல்வராயிருந்து பரிசுகள் பெற்று வந்தார். அக்காலத்தில் முதலியாரவர்கள் கிறித்தவர் நடத்தி

வந்த ஞாயிறு வகுப்புக்களுக்கு இடைவிடாமற் செல்லத் தலைப்பட்டார். இதனால் சுந்தரனார் பாதிரி-மார்களுடன் பழகிக் கிறித்தவ வேதமாகிய **விவிலிய நூலை** நன்கு பயின்றார். இவர் மெற்றிக்குலேஷன் வகுப்பு வரை பயின்றார். ஆனால், பரீட்சைக்கு அனுப்பப்பெறாமல் பள்ளியை விட்டார்.

5. சுந்தரனார் **யாழ்ப்பாணம் நா. கதிரை-வேற்பிள்ளையவர்**களிடம் தமிழைப் பயின்றார்; பின்னர்த் திருமயிலைத் **தணிகாசல முதலியா**ரிடம் சைவ சித்தாந்த நூல்களும், வடமொழியும் பயிலத் தொடங்கினார். அக்காலத்தில் கதிரைவேற்பிள்ளை-யிடம் படித்த மாணவர் பிறரிடம் பாடம் கேட்டல் கூடாது என்ற கட்டுப்பாட்டை மேற்கொண்டிருந்-தனர். நம் முதலியாரவர்கள் அக்கட்டுப்பாட்டை மீறியதால், 'இவர் குருத்துரோகி' என்று அம்மாண-வரால் இகழப்பட்டார். ஆனால், சுந்தரனார் அத-னைப் பொருட்படுத்தவில்லை. 'கல்வியை எவரிடமும் கற்கலாம்,' என்பது இவருடைய கொள்கையாகும்.

6. பள்ளிப் படிப்பு முடிந்த பிறகு கலியாண-சுந்தரனார் ஆயிரம் விளக்கிலிருந்த வெஸ்லியன் பள்ளியில் ஆசிரியராய் அமர்ந்தார். அங்கு ஆறுண்டு-கள் தொண்டுபுரிந்தார். அக்காலத்திலேதான் இவர் மக்களிடையே காணப்படும் மூடப்பழக்கங்களை வெறுக்கத் தொடங்கினார். அதன் பயனாகவே இவர் பொதுமையில் விருப்பம் உடையவராயும், சமரச சன்மார்க்க போதகராயும் விளங்குகின்றார். ஆறுண்டு ஆசிரியப்பணியாற்றிய பிறகு முதலியார் இரா-யப்பேட்டை **வெஸ்லியன் கல்லூரி**யில் தமிழ்ப் பேராசிரியராய் அமர்ந்தார்; ஒன்றரை ஆண்டு-கள் தொண்டாற்றிய பின் அதை விட்டு விலகினார்.

7. பள்ளியாசிரியப் பதவியை விட்டு விலகிய சுந்தரனார், பத்திரிகாசிரியத் தொழிலை மேற்கொண்டார். இவர் 1917–ஆம் ஆண்டு முதல் '**தேசபக்தன்**' என்னும் பத்திரிகையின் ஆசிரியராய் இருந்து தமிழ் மக்களிடையே அரசியல் உணர்ச்சியை ஊட்டினார். அதன் பின்னர், '**நவசக்தி**' என்னும்பத்திரிகையின் ஆசிரியராய் இருந்து ஆங்கிலத்திற்போலத் தமிழிலும் தனி நடையில் எழுத முடியும் என்பதை மெய்ப்பித்தார்.

8. எழுத்திலன்றிப் பேச்சிலும் சிறந்தவர் நம் திரு. வி. க. இவர் பேசத் தொடங்கினால், எத்தனை மணி நேரம் பேசினாலும், கேட்பவர்க்கு வெறுப்பு ஏற்படுவதே இல்லை. இவர் பலவாண்டுகள் தொழிலாளர் தலைவராகவும் பணியாற்றியுள்ளார்.

9. திரு. சுந்தரனார் அரிய பல உரைநடை நூல்களை எழுதியுள்ளார். அவை இடம் பெறாத பள்ளியும் வீடும் இல்லை என்று திட்டமாகக் கூறலாம். இவர் நூல்களைப் படியாத தமிழறிஞர் எவரும் இரார் என்பது திண்ணம்.

10. திரு. வி. க. அவர்கள் தொண்டாற்றாத துறையே இல்லை என்னலாம். இவர் தம் பத்திரிகை வாயிலாகவும், நூல்கள் மூலமாகவும், பேச்சு மூலமாகவும் தமிழுக்கும், தமிழருக்கும், தமிழ் நாட்டுக்கும் செய்துள்ள பணியை அளவிட்டுக் கூற இயலாது. இவர் தமது வரலாற்றை இனிய எளிய அழகிய நடையில் மிகப் பெரிய நூலாக எழுதியுள்ளார். அதனை நீங்களும் படித்துப் பயன் பெறலாம்.

**அருஞ்சொற்பொருள் :**

அன்னை-தாய், தோன்றினார்–பிறந்தார், மருத்துவர்–வைத்தியர், மல்லர்–யுத்தம் செய்பவர், சிலம்பம்–கழி சுற்றல் கத்தி விளையாடல் முதலிய கலைகள், இடையூறு–துன்பம், தலைப்பட்டார்–ஆரம்பித்தார்.

## பயிற்சி :

1. விடை எழுது :—

அ. திரு. வி. க. என்பதன் விளக்கம் யாது?

ஆ. திரு. வி. க. எங்கெங்கெந்தப் பள்ளிகளிற்பயின்றார் ?

இ. அவர் படித்த ஆங்கில உயர் வகுப்பு யாது?

ஈ. திரு. வி. க. வின் தமிழாசிரியர் யார் ?

உ. திரு. வி. க. எவ்வெத்துறைகளில் தொண்டாற்றினார்?

ஊ. திரு. வி. க. வின் வாழ்க்கை வரலாற்றில் மாணவர்க்குச் சிறந்த படிப்பினையாக உள்ள விஷயம் யாது ?

2. இவற்றைத் தெரிந்துகொள் :—

பெயர் வினை வேறுபாடு :

| சொல் | பெயர்ப்பொருள் | வினைப்பொருள் |
|---|---|---|
| கரை | எல்லை | இரங்கு. |
| கவி | பாட்டு, புலவன் | மூடு. |
| கழி | உப்பங்கழி | நீக்கு. |
| குடி | குலம் | பருகு. |
| குறி | அடையாளம் | எழுது. |
| கூடு | பறவைக்கூடு | சேர்ந்துகொள். |
| கேள் | உறவு | வினவு. |
| சந்தி | மாலை நேரம் | கூடு, சேர். |
| சிலம்பு | காலணி | சத்தமிடு. |
| சூடு | வெப்பம் | அணிந்துகொள். |
| செய் | கழனி | வேலை செய். |
| செல் | கறையான் | போ. |

3. கீழ்வரும் வாக்கியத்தில் உள்ள எழுத்துக்களால் அட்டவணையை நிரப்பு :—

கலியாணசுந்தரனார் அவர்கள் தமிழ்ப்பெரியார்.

| உயிர் | மெய் | உயிர்மெய் |
|---|---|---|
| | | |

# 14. கிராமமும் நகரமும்

[பள்ளிக் கழகக் கூட்டத்தில் நடைபெற்ற விவாதம்]

**கழகச் செயலாளர் :** அறிஞர்களே, நண்பர்களே, வணக்கம்! இன்றைய கூட்டத்துக்குத் தலைமை வகித்து இதை நடத்தி வைக்கும்படி ஐந்தாம் வகுப்பு மாணவியார் தமிழரசியாரைப் பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

**தலைவர் :** அறிஞர்களே, நண்பர்களே, வணக்கம்! இக்கூட்டத்துக்குத் தலைமை வகிக்கும் பெருமையை எனக்கு அளித்ததற்காக உங்கட்கு என் வணக்கத்தையும் நன்றியையும் செலுத்துகிறேன். இன்று, 'கிராம வாழ்க்கை சிறந்ததா? நகர வாழ்க்கை சிறந்ததா?' என்பதைப்பற்றி வாதம் செய்து முடிவு காண நாம் இங்குக் கூடி இருக்கிறோம். நகரமே சிறந்ததென்று நண்பர் **பதுமநாபர்** வாதிப்பார். கிராமமே சிறந்ததென்று தோழியர் **சொல்லரசியார்** பேசுவார். இருவர் வாதங்களும் முடிந்த பிறகு வாக்கெடுப்பு நடைபெறும். நீங்கள் எல்லாரும் இருவர் வாதங்களையும் அமைதியாகக் கேட்டுணரக் கோருகிறேன். இப்போது நண்பர் பதுமநாபர் பேசுவார்.

**பதுமநாபன் :** அறிவு மிக்க தலைவர் அவர்களே, அன்பு மிக்க நண்பர்களே, வணக்கம்! நகர வாழ்க்கையே சிறந்தது என்பது எனது திட்டமான முடிவு. அதனைச் சில சான்றுகள் காட்டி விளக்க முயல்வேன்: பொதுவாக நகரங்களில் அழகிய பெரிய மாட மாளிகைகள் நிறைந்த

வீதிகள் காணப்படுகின்றன. இவ்வீதிகள் தார் ஊற்றப்பட்டுக் காலையிலும் மாலையிலும் சுத்தம் செய்யப்பட்டு, மனிதர் நடப்பதற்கும், வண்டிகள் செல்வதற்கும் வசதியாக வைக்கப்படுகின்றன. இரவில் எந்த நேரத்திலும் எங்கும் செல்வதற்குத் துணையாக மின்சார விளக்குகள் வீதிகளை அலங்கரிக்கின்றன. இவை அனைத்தும் கிராமங்களிற் காணக்கிடையா. நகரங்களில் மக்கள் நலம் கருதி மருத்துவச்சாலைகள் அமைக்கப்பெற்றுள்ளன. அவை செல்வர்க்கும், வறிஞர்க்கும் சிகிச்சையளித்து உதவி புரிகின்றன. அன்றியும், மருத்துவ நிபுணர்கள் நகரங்களிலேயே வசிக்கின்றார்கள். அவர்கள் எத்தகைய வியாதிகளையும் போக்க வல்லவர்கள். மக்கள் அறிவு வளர்ச்சிக்கு உரிய எண்ணற்ற கலாசாலைகளும், தொழிற்கல்லூரிகளும், நூல் நிலையங்களும், படிப்பகங்களும் நகரங்களிலேயே இடம் பெற்றுள்ளன. வாணிக வளர்ச்சிக்குத் துணை புரிவனவும் நகரங்களேயாகும். எல்லா வகையான பொருள்களும் நகரங்களில் விற்கப்படுகின்றன. ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு விரைந்து செல்வதற்கு மோட்டார், பஸ் முதலிய வாகனங்கள் துணை புரிகின்றன. விரைவிற் செய்திகள் அனுப்பவும் பெறவும் தந்தி அலுவலகங்களும், தபால் நிலையங்களும் நகரங்களில் இருப்பதை நாம் அறிவோம். மாலை நேரத்தில் தூய காற்றைப் பெறுவதற்குரிய சோலைகள் பலவற்றை நகரங்களில் காணலாம். இச்சோலைகளில் இருந்தபடி உலகின் பல பாகங்களில்

நடைபெறும் விஷயங்களையும், இனிய இசை-யையும் ரேடியோ மூலம் கேட்டு இன்புறலாம். நாள் முழுதும் வேலை செய்து களைப்புற்ற மக்கள், இன்பமாகப் பொழுது போக்குவதற்கு எத்தனையோ பேசும் படக்காட்சிகள் நகரங்-களில் உண்டு. இவ்வாறு நகரங்களின் பெருமை-களை அடுக்கிக்கொண்டே போகலாம். ஆயினும், இது வரை எனது பேச்சைப் பொறுமையுடன் கேட்டிருந்த உங்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொண்டு, இதனுடன் முடித்துக்-கொள்கிறேன். வணக்கம்!

தலை: அறிஞர்களே, நண்பர்களே, இதுவரையில் நகரத்தின் பெருமைகளைப் பற்றி நண்பர் பதுமநாபர் பேசியதைக் கேட்டோம். இப்-போது தோழியர் சொல்லரசியார் கிராம வாழ்க்கையைப் பற்றிப் பேசுவார்.

சொல்லரசி: அறிவு மிக்க தலைவர் அவர்களே, நண்பர்களே, வணக்கம்! நண்பர் பதுமநாபர் நகரங்களின் பெருமைகளைப் பலவாறு புகழ்ந்-தார். ஆனால், அவை அனைத்தும் செயற்கைப் பெருமைகளே ஒழிய, இயற்கைப் பெருமைகள் அல்ல. பண்டைக் காலத்து மக்கள் நீண்ட காலம் வாழ்ந்ததற்கும், நோயற்ற வாழ்க்கை வாழ்ந்ததற்கும், பலசாலிகளாய் இருந்ததற்கும் காரணம் என்ன? அவர்கள் இயற்கையோடு வாழ்ந்ததேயாகும். இக்காலத்திலும் கிராம-வாசிகள் நோயற்றவர்களாயும், பலசாலிகளா-யும் இருக்கிறார்கள். அவர்களுள்ளும் சிலர் நோயாளிகளாய் இருக்கிறார்கள் என்றால்,

அதற்குக் காரணம், அவர்கள் நகர வாழ்க்கை-யைப் பார்த்துத் தாங்களும் செயற்கை வாழ்க்-கையை மேற்கொள்வதேயாகும். மக்கள் நோயின்றி வாழ்வதற்குத் தூய காற்றும் சிறந்த உணவுப் பொருள்களும் அவசியம். நகரங்களில் தூய காற்று ஏது? எங்குச் சென்-ருலும் தூசும் புகையும் கலந்த காற்றையே சுவாசிக்கும் அவசியம் ஏற்படுகிறது. கிராம மக்கள் தினந்தோறும் தங்கள் தோட்டங்களில் விளையும் பசுமையான காய்கறிகளைப் பயன்-படுத்துகிருர்கள். நகரங்களில் பசுமையான காய்கறிக்கு எங்குச் செல்வது? கிராம மக்கள் தங்கள் வீடுகளில் சமைக்கப்படும் உணவுப் பொருள்களைக் குறிப்பிட்ட நேரத்தில் உண்டு, சுகவாழ்வு வாழ்கிருர்கள். நகரங்களில் அடிக்-கொரு சிற்றுண்டிச் சாலை இருப்பதால், நினைத்த போதெல்லாம் அவற்றிற்சென்று, பலர் உண்ட பாத்திரங்களில் உண்டு, பலவகை-யான நோய்களை நகரவாசிகள் தேடிக்கொள்-கிருர்கள். உழைப்பே உடலுக்கு வலிமை தருவது. கிராமவாசிகள் நன்கு உழைக்கிருர்-கள்; எங்குச் செல்லவேண்டுமாளுலும், எவ்-வளவு தூரமாளுலும், நடந்தே செல்கிருர்கள். நகரவாசிகள் உழைப்புக்கு அஞ்சுகிருர்கள்; சிறிது தூரம் போக விரும்பினும் பஸ்ஸில் ஏறிச் செல்கிருர்கள்; ஆதலால், வலிமை குன்-றியவர்களாகவே காணப்படுகிருர்கள். இவ்-வாறு நகர வாழ்க்கையால் ஏற்படும் தீமைகளை அடுக்கிக்கொண்டே போகலாம். நேரம் இல்-லாமையால், இதுவரை பொறுமையுடன்

எனது பேச்சைக் கேட்டுக்கொண்டிருந்த உங்கட்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொண்டு எனது சிற்றுரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்!

**தலை:** அறிஞர்களே, நண்பர்களே, நகர வாழ்க்கை குறித்தும், கிராம வாழ்க்கை குறித்தும் நண்பர் பதுமநாபரும், தோழியர் சொல்லரசியாரும் பேசிய அரிய மொழிகளைக் கேட்டோம். நாம் இன்று விவாதத்துக்கு எடுத்துக்கொண்ட விஷயம் வாதித்துத் தீர்ப்புக் கூறத்தக்கதன்று. நகர வாழ்க்கையிலும் பல நன்மைகள் உண்டு; கிராம வாழ்க்கையிலும் பல நன்மைகள் உண்டு. ஆயினும், இயற்கையோடு ஒன்றி வாழ்வதே சிறந்தது என்பது அறிஞர்களின் கருத்து. ஆதலால், எங்கு வாழ்ந்தாலும் அத்தகைய வாழ்க்கை நடத்துவதே மிகவும் சிறந்ததாகும். நெடுநேரம் ஆகிவிட்டபடியால், இதோடு கூட்டம் முடிவுறும். வணக்கம்!

**செய:** நண்பர்களே, இக்கூட்டத்துக்குத் தலைமை வகித்து இதை நன்முறையில் நடத்திய தோழியர் தமிழரசியாருக்கும், தங்கள் அரிய உரைகளால் நம் உள்ளத்துக்கு விருந்தளித்த நண்பர் பதுமநாபருக்கும், தோழியர் சொல்லரசியாருக்கும் இக்கழகத்தின் சார்பாக எனது நன்றியை உரிமைப்படுத்துகிறேன். வணக்கம்!

**அருஞ்சொற்பொருள்:**

பணிவுடன்–வணக்கத்துடன், நகரம்–பெரும்பட்டணம், வாக்கெடுப்பு–'ஓட்டு' எடுத்தல், கேட்டுணர–கேட்டுத்தெளிய, முடிவு–அபிப்பிராயம், சான்று–சாட்சி, வசதி–வாய்ப்பு, மருத்

துவச்சாலை-வைத்தியசாலை, வறிஞர்-ஏழைகள், நிபுணர்-ஆற்றல் மிக்கவர், நூல் நிலையம்-புத்தகசாலை, துணை புரிவன-உதவிசெய்வன, வேகமாக-சீக்கிரம், அலுவலகம்-காரியாலயம், தூய-பரிசுத்தமான, இசை-சங்கீதம், அடுக்கிச் சொல்லலாம்-மேலும் மேலும் சொல்லலாம், செயற்கைப் பொருள்-கையால் செய்யப்படும் பொருள், இயற்கைப் பொருள்-மனித முயற்சி இல்லாமல் தானே தோன்றும் பொருள், சுவாசிக்க-மூச்சு விட, வலிமை குன்றி-பலம் குறைந்து, தீமை-கெடுதி, சிற்றுரை-சிறிய பேச்சு, மொழி-பேச்சு, ஒன்றி-தொடர்பு கொண்டு, உள்ளம்-மனம்.

### பயிற்சி :

**1. விடை எழுது:—**

அ. கழகக் கூட்டத்தில் எதைப்பற்றி வாதம் நிகழ்ந்தது ?

ஆ. கூட்டத்துக்குத் தலைமை வகித்தவர் யார்? அவர் பேச்சைச் சுருக்கமாக எழுது.

இ. பட்டண வாழ்க்கையே சிறந்தது என வாதித்தவர் யார் ? அவர் வாதத்திற்குக் கூறிய சான்றுகளில் மூன்றினை எழுது.

ஈ. கிராம வாழ்க்கையே சிறந்தது என்று பேசியவர் யார் ? அவர் கூறிய சான்றுகள் யாவை ?

உ. உனது கருத்து யாது ? நீ கூறும் உண்மைகள் யாவை ?

**2. எதிர்ச்சொற்கள் எழுது :—**

அறிஞன், நண்பர், சிறந்தது, முடிவு, வன்மையான, செல்வர், விரைவில், தூய, பெருமை, புகழ்ந்தார்.

**3. இவற்றை அமைத்து வாக்கியங்கள் எழுது :—**

கழகம், செயலாளன், அறிஞர், வாதம், வாக்கெடுப்பு, சான்று, முயல்வேன்.

## இலக்கணம்:

### பெயர்ச்சொல்—வகைகள்

**இவற்றைப் படி :—**

அ. முருகன், மேஜை—இவை பொருள்களின் பெயர்கள்.

ஆ. சென்னை, வயல்—இவை இடங்களின் பெயர்கள்.

இ. மாதம், கிழமை—இவை காலத்தின் பெயர்கள்.

ஈ. தலை, கிளை—இவை சினை (உறுப்புக்)களின் பெயர்கள்.

உ. வெண்மை, உண்மை—இவை குணங்களின் (பண்புகளின்) பெயர்கள்.

ஊ. பொங்கல், ஓட்டம்—இவை தொழில்களின் பெயர்கள்.

**மனப்பாடம் செய்:**

**ஒன்றன் பெயரே பெயர்ச்சொல்: அது பொருட்பெயர், இடப்பெயர், காலப்பெயர், சினைப்பெயர், குணப்பெயர், தொழிற்பெயர் என ஆறு வகைப்படும்.**

# 15. கதைப் படம்

குறிப்பு :—படத்தைப் பார்த்துக் கதையைச் சொல்லச் செய்தல் :



# 16. ஒட்டக்கூத்தரும் புகழேந்தியாரும்

1. ஒட்டக்கூத்தர், புகழேந்தியார் இருவரும் தமிழ்ப் பெரும்புலவர்; சமகாலத்தவர்; சிறிது காலம் ஓர் அரசவையில் ஒருங்கு இருந்தவர்; ஆயி-னும், அவ்விருவரும் நெடுங்காலம் பகைவராயிருந்-தனர் என்பதை விளக்கப் பல கதைகள் வழங்கி வருகின்றன. அவற்றுள் ஒன்றை இப்பாடத்தால் அறியலாம்:

2. ஏறத்தாழ எண்ணூறு ஆண்டுகளுக்கு முன், சோழநாட்டைக் குலோத்துங்கர் என்ற சோழ மன்னர் ஆண்டு வந்தார். அவர் இளைஞரா-யிருந்தபோது அவருக்குத் தமிழாசிரியராயும், பிறகு அவர் அரியணை ஏறிய போது அவருக்கு அமைச்ச-ராயும் இருந்தவர் ஒட்டக்கூத்தர். தமக்குக் குருவா-யும் அமைச்சராயும் இருந்த ஒட்டக்கூத்தரிடம் அர-சர் பயபத்தியுடன் நடந்து வந்தார். அரசர் மணப்-பருவம் அடைந்தபோது அவருக்குப் பெண் பேசுவ-தற்காக ஒட்டக்கூத்தர் பாண்டிய மன்னரை நாடிச் சென்றார்.

3. அக்காலத்தில் மதுரையை ஆண்டுகொண்-டிருந்த பாண்டிய மன்னரின் சபையில் புகழேந்திப் புலவர், புலவர் தலைவராய் இருந்தார். சோழருக்-குப் பெண்பேசப் புறப்பட்ட ஒட்டக்கூத்தர், கொற்கையை அடைந்தார். பாண்டிய மன்னர் அவரை வரவேற்று உபசரித்து, தம்மை நாடி வந்த காரணம் யாதென வினவினர். ஒட்டக்கூத்தர் தாம் வந்த காரியம் இன்னதெனத் தெரிவித்தார். தம் பெண்ணை மணம் புரியச் சோழ மன்னருக்குத் தகுதி உண்டோ என்று கேட்டார் பாண்டிய மன்னர்.

4. ஒட்டக்கூத்தர் பாண்டிய மன்னரை நோக்கி, "செழியர் பிரானே, உம் மகளை மணக்கச் சோழ மன்னர்க்குரிய தகுதியைக் கூறுகிறேன்; கேளும்: சோழ மன்னர் ஏறும் **கோரம்** என்னும் புரவிக்குப் பாண்டியர் ஏறும் **கனவட்டம்** என்னும் குதிரை ஒப்பாகுமா? மாரியிலும் கோடையிலும் இடையறாமல் நீர் பெருகிச் சோழ நாட்டை வளம்படுத்தும் **காவிரி** யாற்றுக்குப் பாண்டி நாட்டிற்பாயும் **வையை** நதியை எப்படி நிகராகக் கூறலாம்? சிவபெருமானால் விரும்பத்தக்கதும், சோழரால் அணியப்படுவதுமான **ஆத்தி மாலை**க்குப் பாண்டியர் அணியும் **வேப்பமாலை** நிகராகுமா? சோழமன்னர் சூரிய குலத்தில் தோன்றியவர். பாண்டியர் சந்திர குலத்தில் வந்தவர். ஆகவே, **சூரிய**னுக்கு அதன்முன் ஒளிமழுங்கிப் போகின்ற **சந்திரன்** ஒப்பாகுமா? வெற்றி மிக்க சோழரின் **புலிக்கொடி**க்குப் பாண்டியரின் **மீன்கொடி** எங்ஙனம் நிகராகும்? சோழமன்னரின் தலைநகரமான **உறையூ**ருக்குப் பாண்டியரின் தலைநகரான **கொற்கை** ஒப்பாகுமா? எனவே, எக்காரணத்தாலும் சோழ நாட்டுக்குப் பாண்டி நாடு ஒப்பாகாது!" என்னும் கருத்துக்கள் அடங்கிய ஒரு செய்யுளைக் கூறினார்.

5. தம்மைத் தாழ்த்தியும், சோழமன்னரை உயர்த்தியும் ஒட்டக்கூத்தர் கூறிய பாட்டைக் கேட்ட பாண்டிய மன்னர், சற்று வருத்தம் அடைந்து, உடனே அப்பாட்டுக்குத் தக்க பதில் கூறவேண்டும் என்னும் கருத்துடன் தம் அவைப் புலவரான புகழேந்தியாரைப் பார்த்தார்.

6. மன்னர் கருத்தறிந்த புகழேந்தியார், ஒட்டக்கூத்தரை நோக்கி. "புலவீர், **அகத்திய முனி**-

வர் தமிழ் மொழிக்கு இலக்கணம் வகுத்தது சோழ நாட்டு நேரிமலையிலா, பாண்டி நாட்டுப் பொதிகை மலையிலா? சோமசுந்தரக் கடவுள் அறுபத்துநான்கு திருவிளையாடல்களை மதுரையில் புரிந்தாரேயன்றி, உறையூரில் புரியவில்லையே! திருமால் மீனாய் அவதாரம் செய்தாரேயன்றிப் புலியாய் அவதரிக்கவில்லையே! எனவே, புலிக்கொடியைக்காட்டிலும் மீன் கொடி சிறந்தது அல்லவா? சிவபெருமான் சடைமுடியில் சூரியன் இடம் பெறவில்லை; சந்திரனே இடம் பெற்றிருக்கிறான். ஆகவே, சோழரின் சூரிய குலத்தைக்காட்டிலும் பாண்டியர் சந்திரகுலம் சிறந்தது அல்லவா? சமணர்களோடு வாது புரிந்த திருஞான சம்பந்தர் இயற்றிய பாட்டெழுதிய ஏடுகள் வைகை நதியிலேயே இடப்பட்டன; காவிரியில் இடப்படவில்லை. ஆதலால், காவிரியைக்காட்டிலும் வைகை சிறந்தது அல்லவா? பேய் அணுகாமல் காப்பது சோழர் தரிக்கும் ஆத்தியா, பாண்டியர் தரிக்கும் வேம்பா? எனவே, வேம்பு ஆத்தியைக்காட்டிலும் சிறந்தது அல்லவா? புலவரே, நீர் கூறியபடி சோழநாடு எக்காரணத்தாலும் பாண்டி நாட்டைவிடச் சிறந்ததாகாது,'' என்னும் கருத்தடங்கிய ஒரு செய்யுளைக் கூறினார். அது கேட்ட ஒட்டக்கூத்தர், சினம் கொண்டார்; ஆயினும், அதனை வெளிக்காட்டாமல், நயமாகப் பேசித் தம் மன்னர்க்குப் பாண்டிய மன்னர் தம் மகளை மணம் செய்துதர இசையும்படி செய்தார்; பிறகு சில நாட்கள் அங்குத் தங்கியிருந்து, உறையூருக்குத் திரும்பினார்.

7. பாண்டியர் மகளுக்கும் சோழமன்னருக்கும் திருமணம் வெகு சிறப்பாக நடைபெற்றது.

பாண்டிய மன்னர், தம் மகளுக்கு எண்ணற்ற பொருள்களைச் சீதனமாக ஈந்தார்; அன்றியும், தம் அவைப் புலவர் புகழேந்தியாரையும் தம் மகளுடன் உறையூருக்கு அனுப்பிவைத்தார்.

8. அவரைக் கண்ட ஒட்டக்கூத்தர், அவர் முன்னர்த் தம்மை எதிர்த்துப் பாட்டியற்றியதற்காகக் கோபித்து, அவரைச் சிறையிலிட்டார். புகழேந்தியார் சிறையில் இருந்து துன்பங்களை அனுபவித்தார். அதனை அறிந்த அரசி சினமுற்றாள். அவள் சினத்தைத் தணிவிக்கப் புகழேந்தியார் சிறையினின்று விடுவிக்கப்பட்டார்.

9. பிறகு அவர் சோழநாட்டை விட்டு **மள்ளுவ நாட்டை** அடைந்தார்; அந்நாட்டு அரசனான **சந்திரன்சுவர்க்கி**யால் ஆதரிக்கப்பட்டார்; அங்கிருந்த போது **நளன்** சரித்திரத்தைக் கூறும் **நளவெண்பா** என்னும் நூலை இயற்றிப் புகழ் பெற்று வாழ்ந்து வந்தார். நளவெண்பா, இளைஞர் கற்பதற்குரிய சிறந்த நூல். அதனை நீ மேல் வகுப்புக்களிற் படித்து மகிழலாம்.

**அருஞ்சொற்பொருள் :**

சமகாலத்தவர்—ஒரே காலத்தில் வாழ்ந்தவர், அரசவை—ராஜசபை, ஒருங்கு—ஒன்றாக, ஏறத்தாழ—ஏறக்குறைய, அரியணை—சிங்காதனம், அமைச்சர்—மந்திரியார், கொற்கை—பாண்டி நாட்டின் துறைமுகம், செழியன்—பாண்டியன், புரவி—குதிரை, மாரி—மழை, ஒளி — பிரகாசம், நிகர் — ஒப்பு, கருத்து — எண்ணம், அவதாரம்—பிறப்பு, குலம்—வமிசம், சமணர்—ஜைனர், அணுகாமல்—நெருங்காமல், சீதனம்—மணப் பெண்ணுக்குத் தரும் பொருள்கள், ஈந்தார்—கொடுத்தார், சினமுற்றாள்—கோபித்தாள், **தணிவிக்க—ஆற்ற.**

**பயிற்சி :**

**1. விடை எழுது :—**

அ. ஒட்டக்கூத்தர் யார்? அவரை ஆதரித்தவர் யார்?

ஆ. ஒட்டக்கூத்தர் ஏன் கொற்கைக்குச் சென்றார்?

இ. பாண்டிய மன்னர் சபையிலிருந்த புலவர் யார்?

ஈ. ஒட்டக்கூத்தர் சோழ மன்னனுடைய பெருமை-களாகக் கூறியவைகள் யாவை?

உ. புகழேந்தியார் சோழனுடைய குதிரை, மாலை, கொடி, தலைநகர், ஆறு ஆகியவற்றைக் காட்டிலும் பாண்டி-யனுடைய மாலை, கொடி, தலைநகர், ஆறு இவை சிறந்தவை என எவ்வாறு மெய்ப்பித்தார்?

ஊ. ஒட்டக்கூத்தர் புகழேந்தியார்மீது தாம் கொண்டி-ருந்த பகையை எவ்வாறு தீர்த்துக்கொண்டார்?

எ. புகழேந்தியார் நளவெண்பா என்னும் நூலை எங்-கிருந்து இயற்றினார்?

**2. எதிர்ச்சொற்கள் எழுது :—**

சமகாலத்தார், ஒழுங்கு, இளைஞர், வினா, ஏறுகின்ற, நிகரானது, தாழ்த்தி, அணுகாமல், பகைத்து, புகழ்.

**3. இவற்றை அமைத்து வாக்கியங்கள் எழுது :—**

சமகாலத்தவர், ஏறத்தாழ, வினவினார், புரவி, ஒளி, சினந்து, அணுகாமல், தகாது, இசையும்படி, சீதனம்.

**இலக்கணம் :**

**வினைச்சொல் :**

**இவற்றைப் படி :—**

அ. அரசி வந்தாள்.—இவ்வாக்கியத்தில் 'வந்தாள்' என்-னும்வினைச்சொல், வினை முடிந்ததைத் தெரிவிக்கிறது. இது முற்று வினை எனப்படும். இது வினைமுற்று என்றும் பெயர் பெறும்.

ஆ. இளவரசி வந்து—இத்தொடரில் 'வந்து' என்னும் வினை, தொழில் முடிந்ததைக் குறிக்கவில்லை. இது

தொழில் முற்றுப் பெறுவதற்கு வேறொரு சொல்லை நாடி நிற்கின்றது. இது **எச்சவினை** எனப்படும். (எச்சம்–குறைந்த.)

இ. கடைக்குச் **சென்ற** —இத்தொடரில் 'சென்ற' என்னும் வினை, பொருள் குறைந்து நிற்கிறது. இதுவும் எச்ச வினையே.

ஈ. இளவரசி **வந்து போனாள்**.—இதில் 'வந்து' என்னும் எச்சவினை, 'போனாள்' என்னும் **வினையைக்கொண்டு முடிவதால், வினை எச்சம்** என்று பெயர் பெறும்.

கடைக்குச் **சென்ற பையன்**.—இதில் 'சென்ற' என்னும் எச்சவினை, 'பையன்' என்னும் பெயரைக்கொண்டு முடிவதால், **பெயரெச்சம்** என்று பெயர் பெறும்.

**மனப்பாடம் செய் :**

**வினைமுடிந்த வினைச்சொல் முற்றுவினை. வினை முற்றுப் பெறாத வினைச்சொல் எச்சவினை; பெயரைக் கொண்டு முடியும் எச்ச வினை பெயரெச்சம்; வினையைக் கொண்டு முடியும் எச்சவினை வினையெச்சம்.**

## 17. கதை எழுதுவது எப்படி?

(உரையாடல்)

இசையரசி: அண்ணா, எங்கள் ஆசிரியர் ஒரு கதை எழுதிவரச் சொன்னார். நான் பல முறை எழுத முயன்றேன். ஆயினும், கதை ஒழுங்-காக அமையவில்லை. என்ன செய்யலாம்?

இளங்கோ: அரசி, நாம் எத்தனையோ கதைகளை அறிவோம். ஆனால், அவற்றை எல்லாரும் ஒழுங்காக எழுத முடியாது. அதற்குக் கார-ணம், கதையை எப்படி எழுதுவது என்பது தெரியாததுதான்.

இசை: அதைத்தான் நானும் சொல்கிறேன். கதை எழுதும் முறைகளைத் தயவு செய்து எனக்குச் சொல்லுங்கள், அண்ணா.

இளங்: சொல்கிறேன்; கவனி: ஒவ்வொரு கதையிலும் மூன்று பகுதிகள் இருக்கும். அவற்றை முதற்பகுதி, இடைப்பகுதி, கடைப்-பகுதி என்று கூறலாம். கதையின் தொடக்-கப் பகுதியே முதற்பகுதியாகும். அப்பகுதி-யில் கதை வளர்வதற்குரிய நிகழ்ச்சிகளை எழுத வேண்டும். ஒவ்வொரு நிகழ்ச்சியையும் ஒவ்-வொரு பத்தியாக எழுத வேண்டும். பல வாக்கியங்கள் ஒன்றன்பின் ஒன்றாக நின்று ஒரு கருத்தை விளக்குவதே **பத்தி** எனப்படும். கதையின் முக்கிய நிகழ்ச்சிகள் இடைப்பகுதி-யில் வரவேண்டும். இப்பகுதியிலும் முன் கூறியபடியே ஒவ்வொரு நிகழ்ச்சியையும் ஒவ்-வொரு பத்தியாக எழுத வேண்டும். கதையின்

முடிவையும், கதையின் நீதியையும் கடைப்பகுதியில் அமைத்து எழுத வேண்டும். வாயினுற் கூறுவதைவிட ஒரு கதையையே எழுதிக் காட்டுகிறேன்; பார். நீ என்ன கதை எழுத வேண்டும்?

**இசை:** **'காகமும் நரியும்'** என்னும் கதை எழுத வேண்டும்.

**இளங்:** அரசி, அக்கதையை எப்படி எழுதுவது என்பதை விளக்குகிறேன்; கவனி: காகம் பசித்திருப்பதும், வடையைத் திருடுவதும் ஆகிய இரு நிகழ்ச்சிகளும் கதையின் முதற்பகுதியாக அமைய வேண்டும். காகத்தின் வாயில் வடையைக் கண்ட நரி காகத்தைப் புகழ்தல், காகம் ஏமாருமல் இருத்தல் ஆகிய இரண்டும் கதையின் இடைப்பகுதியாக அமைய வேண்டும். 'பாட்டுப் பாடு,' என்று கேட்டவுடனே காகம் ஏமாறுதலும், நீதியும் கதையின் கடைப்பகுதியாக அமையவேண்டும். அரசி, இவற்றை மனத்திற்கொண்டு கதையை எழுதிப் பார். அது நன்ருக அமையும்.

**இசை:** சரி அண்ணு, இதோ எழுதிக்கொண்டு வருகிறேன்.

## இசையரசி எழுதிய கதை:

### முதல்

1. ஓர் ஊரில் காகம் ஒன்று இருந்தது. ஒரு நாள் அதற்குப் பசி மிகுதியாய் இருந்தது. அது இங்கும் அங்கும் அலேந்தது. ஆனல், இரை எதுவும் கிடைக்கவில்லே.

2. கடைசியில் அது ஒரு சிற்றுண்டிக் கடையைக் கண்டது. கடையில் ஒரு தட்டு நிறைய வடைகள் இருந்தன. செட்டியார் ஏமாந்திருந்த சமயத்தில் காகம் ஒரு வடையைத்தூக்கிக்கொண்டு போய் ஒரு மரக்கிளையில் உட்கார்ந்தது.

**இடை**

3. காகத்தின் வாயில் இருந்த வடையை ஒரு நரி கண்டது. நரி மிகவும் தந்திரமுள்ள பிராணி. அது காகத்தினிடம் இருந்த வடையை அபகரிக்க எண்ணியது; மெல்லச் சென்று மரத்தை அடைந்தது.

4. நரி காகத்தை நோக்கி, "தம்பீ, சுகமாய் இருக்கிறாயா?" என்று கேட்டது. வாயைத் திறந்தால் வடை விழுந்துவிடும். ஆதலால், காகம் வாயைத் திறவாமல் இருந்தது. நரி மறுபடியும் காகத்தை நோக்கி. "தம்பீ, என்மீது உனக்கு ஏன் கோபம்? பேசமாட்டேன் என்கிறாயே!" என்று கேட்டது. அப்போதும் காகம் வாயைத் திறக்கவில்லை.

**கடை**

5. நரி ஒரு யோசனை செய்தது: "ஆ! காகமே, உனது உடலே இவ்வளவு அழகாய் இருக்கிறதே! நீ ஒரு பாட்டுப் பாடினால் அது எவ்வளவு அழகாக இருக்கும்! தயவு செய்து ஒரு பாட்டுப் பாட மாட்டாயா?" என்று கூறி நரி காகத்தைப் புகழ்ந்தது.

6. நரி கூறிய புகழ் மொழியைக் கேட்டவுடனே காகம் தற்பெருமை கொண்டது; நரி கூறியது உண்மை என நம்பித் தன் வாயைத் திறந்து, "கா, கா," என்று கத்தியது. உடனே

வடை கீழே விழுந்தது. நரி வடையைத் தூக்கிக்-கொண்டு ஓடிவிட்டது. ஓடும்போது, 'புகழ்ச்சியை விரும்பி ஏமாருதவர் இந்த உலகத்தில் எவர்?' என்று எண்ணிக்கொண்டே ஓடிற்று.

### அருஞ்சொற்பொருள் :

உரையாடல்–சம்பாஷித்தல், முறைகள்–வகைகள், பகுதிகள்–பிரிவுகள், தொடக்கம்–ஆரம்பம், அமைத்து–பொருத்தி, இடைப்பகுதி – நடுப்பாகம், இரை – ஆகாரம், சிற்றுண்டி – பட்சணம்.

### பயிற்சி :

**1. விடை எழுது :—**

அ. கதை எத்தனை பகுதிகளாக அமைய வேண்டும்? அவை எவை?

ஆ. கதையின் முதற்பகுதியில் எழுத வேண்டிய விஷயங்கள் எவை?

இ. கதையின் இடைப்பகுதியில் இடம்பெற வேண்டிய விஷயங்கள் எவை?

ஈ. கதையை எவ்வாறு முடிக்க வேண்டும்?

**2 இவற்றைத் தெரிந்துகொள் :—**

பெயர் வினை வேறுபாடு :

| சொல் | பெயர்ப்பொருள் | வினைப்பொருள் |
|---|---|---|
| ஆடு | ஆடு என்னும் மிருகம் | விளையாடு. |
| ஆய் | தாய் | ஆராய். |
| ஆறு | வழி, நதி, எண். | தணி. |
| இசை | புகழ், பாட்டு. | ஒப்புக்கொள். |
| இரா | இரவு | இருக்கமாட்டா. |
| இரை | உணவு | சத்தமிடு. |
| இறை | கடவுள், அரசன். | நீர்பாய்ச்சு. |
| உடை | துணி | துண்டாக்கு. |
| உரை | அர்த்தம் | தேய், சொல். |
| எள் | ஒரு தானியம் | இகழ்ந்து பேசு. |
| ஓடு | வீட்டு ஓடு | விரைந்து செல். |

**3. இவற்றை வாக்கியங்களில் அமைத்து எழுது :—**

ஆசிரியர், முயன்றேன், பகுதி, நிகழ்ச்சி, முடிவு, நீதி, மிகுதி, சிற்றுண்டி, தந்திரம், அபகரிக்க,



# 18. பொங்கல் விழா

1. உழைத்து அலுத்த உள்ளத்துக்கு உவகை அளிப்பவை விழாக்கள். இக்காரணம் பற்றியே பண்டு முதல் இன்று வரை எல்லா நாட்டினரும், எல்லாச் சமயத்தவரும் பற்பல விழாக்களைக் கொண்டாடி வருகின்றனர். நமது தமிழ் நாட்டில் கொண்டாடப்படும் விழாக்கள் பல. அவ்விழாக்களுள் ஒவ்வொன்றும் ஏதேனும் ஒரு காரணம் பற்றியே கொண்டாடப்படுகின்றது. தமிழர் கொண்டாடும் விழாக்களுள் மிகவும் முக்கியமானது **பொங்கல் விழா.** இது கொண்டாடப்படும் காரணத்தையும், வகையையும் இப்பாடத்தால் அறியலாம் :

2. பண்டு முதல் இன்று வரை நமது நாடு பயிர்த்தொழில் நாடாகவே இருந்து வருகிறது. இப்பயிர்த்தொழில் பெரும்பாலும் **ஆனி, ஆடி** மாதங்களில் தொடங்கி, **மார்கழி, தை** மாதங்களில்

முடிவு பெறும். பயிர்கள் செழித்து வளர்வதற்கு மழையும் வெப்பமும் இன்றியமையாதவை. மழை-யைத் தரும் தெய்வம் **இந்திரன்**. வெப்பம் அளிக்-கும் தெய்வம் **சூரியன்**. தமிழர் நன்றி மிக்கவர். ஆதலால், மார்கழியில் அறுவடை செய்யப்படும் நெல்லைத் தங்கள் உழுதொழில் செழிக்க உதவிய கடவுளர் இருவர்க்கும் படைத்து வணங்கும் நோக்-கத்துடனே **போகி**, **பொங்கல்** விழாக்களைக் கொண்டாடுகின்றனர்.

3. மார்கழி மாதக் கடைசி நாளன்று இந்திரனை வணங்கும் விழா நடைபெறும். இந்திரனுக்குப் **போகி** என்னும் பெயரும் உண்டு. ஆதலால், அது **'போகி பண்டிகை'** என்று வழங்கப்படுகிறது. அன்று அதிகாலையில் வீட்டு வாயிலின் முன்னே எரி மூட்டிப் பெரியவரும் சிறியவரும் அதைச் சூழ்ந்திருந்து பறைகொட்டியும், பாட்டுப் பாடியும் மகிழ்வர் : உபயோகமற்ற கூடை, முறம், சல்லடை, விளக்குமாறு முதலிய பொருள்களை அத்தீயிலிட்டு எரிப்பர். விடிந்த பிறகு எண்ணெய் தேய்த்துத் தலை முழுகுவர். இரவு கொழுக்கட்டை முதலிய தின்பண்டங்களோடு படையலிட்டுப் போகியை வணங்குவர்.

4. மறுநாளாகிய தைத்திங்கள் முதல்நாளன்று பொங்கல் விழாக் கொண்டாடப்படும். அன்று வெள்ளையடித்து வீட்டைச் சுத்தம் செய்து, செம்-மண் கோடுகளாலும் மாக்கோலங்களாலும் அலங்-கரிப்பர் ; பிறகு முற்றத்தின் மேற்குப் புறத்தில் களிமண்ணால் சிறு மனை அமைப்பர்; அதன் இடை-யில் பசுவின் சாணத்தால் பிள்ளையார் பிடித்து

வைப்பர் ; அப்பிள்ளையாரை அறுகம்புல்லாலும், மலர்களாலும் அலங்கரிப்பர் ; அவர் முன் கரும்பு, மஞ்சட்கிழங்கு, வள்ளிக்கிழங்கு, பறங்கிக்காய் முதலியவற்றை வைப்பர்.

5. முற்றத்தின் இடையில் வடக்குத் தெற்கில் நீண்ட பள்ளம் வெட்டி, அதிலுள்ள மண்ணைக் கொண்டு ஒன்பது உருண்டைகளாக்கி, மும்மூன்று கொம்மைகள் அமைத்து, அப்பள்ளத்தை மூன்று அடுப்பாக்கி உபயோகிப்பர். அம்மூன்று அடுப்புகளின்மீதும் மூன்று புதுப் பானைகளை ஏற்றிப் புதுநெல் அரிசியை அப்பானைகளில் இட்டுப் பொங்குவர். சோறு பொங்கும் தருணத்தில் பானைகளிற் சிறிது பாலைப் பெய்வர். சோறு பொங்கி வழியும் போது வீட்டில் உள்ள பெரியவரும் சிறியவரும் '**பொங்கலோ பொங்கல்!**' என்று மும்முறை மகிழ்ச்சி பொங்கக் கூவுவர். சோறு நன்ருய் வெந்த பிறகு பானைகளை இறக்கிப் பிள்ளையார்முன் வைப்பர். பொங்கிய சோற்றைப் பூசனி இலையில் இட்டுச் சூரியனுக்குப் படைப்பர்.

6. தைத்திங்கள் இரண்டாம் நாள் **மாட்டுப் பொங்கல்** கொண்டாடப்படும். உழவுத் தொழில் புரிபவர்க்கு மாடுகளே ஒப்பற்ற செல்வம். '**மாடு**' என்னும் சொல் '**செல்வம்**' என்று பொருள்படும். மாடுகளை நன்ருகக் குளிப்பாட்டி, அவற்றின் கொம்புகளுக்கு அழகிய வண்ணங்களைத் தீட்டி அவற்றில் கொப்பியை மாட்டி, நெற்றிக்கும் கழுத்துக்கும் சதங்கைகளும் மணிகளும் கட்டி, அலங்கரிப்பர். அன்றும் முன்னுள் போலவே பொங்கலிட்டு அச் சோற்றை மாட்டுக்கு உண்ணக் கொடுத்து மகிழ்வர்.

7. மாட்டுப் பொங்கலுக்கு மறுநாள் **கன்றுப் பொங்கல்** எனப்படும். இதைக் **காணும் பொங்கல்** என்று கூறுவதும் உண்டு. இரண்டுக்கும் தக்க காரணம் உண்டு. உழவர்க்குக் கன்றுகள் எதிர்காலச் செல்வமாதலால், அன்று பொங்கலிட்டு அச்சோற்றைக் கன்றுகளுக்குத் தின்னக் கொடுப்பர். இது பெரும்பாலும் சிறுவர் சிறுமியர் கொண்டாடும் விழாவாகவே இருக்கும்.

8. ஆனி, ஆடி மாதங்கள் தொடங்கித் தை மாதம் வரையில் தங்கள் உழவுத் தொழிலில் கண்ணும் கருத்துமாயிருந்த உழவர்கள், அந்தத் தொழில் முடிந்தவுடனே, தங்கள் உறவினரையும் நண்பரையும் காணும் தினமாதலால், இது காணும் பொங்கல் எனப்பட்டது. அன்று பெரியோர் ஒருவரையொருவர் கண்டு, **'பால் பொங்கிற்ரு?'** என்று விசாரித்து உரையாடுவர். பண்ணையாட்கள், தங்கள் முதலாளிகளைக் கண்டு பரிசு பெறுவார்கள். சிறுவர் சிறுமியர், தத்தம் நெருங்கிய உறவினரைக் கண்டு, வணங்கி, நல்வாழ்த்தும் பரிசுகளும் பெறுவார்கள். மார்கழிக் கடைசி நாளும், தைமாதம் முதல் மூன்று நாளும் பொங்கல் விழா இவ்வாறு தமிழ் நாடெங்கும் சிறப்பாகக் கொண்டாடப்படுவதை இன்றும் காண்கிறோம்.

**அருஞ்சொற்பொருள் :**

அலுத்த-களைத்த, உள்ளம்-மனம், உவகை-சந்தோஷம், சமயம்–மதம், வெப்பம்–உஷ்ணம், எரி–நெருப்பு, பறை–தோல் வாத்தியங்களுள் ஒன்று, திங்கள்–மாதம், வெள்ளையடித்து - சுண்ணும்படித்து, மனை–வீடு, தருணம்-சமயம், கொப்பி – பித்தளையால் செய்யப்பட்ட மாட்டுக்கொம்பின் நுனியில் செருகப்படும் உறை, உரையாடுவர்–பேசுவர்.

## பயிற்சி :

1. **விடை எழுது :—**

   அ. மார்கழிமாதக் கடைசி நாள் கொண்டாடப்படும் விழாவின் பெயர் யாது? அதற்கு அப் பெயர் வழங்கக் காரணம் யாது?

   ஆ. பொங்கல் விழா எதற்காகக் கொண்டாடப்படுகிறது? அது கொண்டாடப்படும் முறையைச் சுருக்கமாக எழுது.

   இ. மாட்டுப் பொங்கல் கொண்டாட வேண்டிய அவசியம் யாது?

   ஈ. தைமாத மூன்றும் நாள் கன்றுப் பொங்கல் தினம் என்றும், காணும் பொங்கல் தினம் என்றும் கூறப்படுவதற்குக் காரணங்கள் யாவை?

2. **இவற்றைத் தெரிந்துகொள் :—**

**பெயர் வினை வேறுபாடு :**

| சொல் | | பெயர்ப்பொருள் | | வினைப்பொருள் |
|---|---|---|---|---|
| சோதி | — | ஒளி | — | பரிசோதி. |
| திரி | — | விளக்குத்திரி | — | சுற்றித்திரி. |
| தேக்கு | — | ஒரு மரம் | — | நீரைத் தேங்கச் செய். |
| தை | — | ஒரு மாதம் | — | துணி தை. |
| தொழு | — | மாட்டுத் தொழுவம் | | கும்பிடு. |
| நகர் | — | பட்டணம் | — | நகர்ந்து போ. |
| நகை | — | ஆபரணம் | — | சிரி. |
| நாடு | — | இராச்சியம் | — | தேடு. |
| நெய் | — | வெண்ணெயிலிருந்து எடுக்கப்படுவது | — | ஆடை நெய். |

3. **இவற்றை அமைத்து வாக்கியங்கள் எழுது :—**

   உவகை, விழா, இன்றியமையாத, நோக்கம், அலங்கரி, தருணம், குளிப்பாட்டி, காரணம், கண்ணும் கருத்துமாய், பண்ணையாள், பரிசு.

4. **எதிர்ச்சொற்கள் எழுது :—**

   பண்டு, பற்பல, உபகாரம், முன்பு, உபயோகமற்ற, கொடுப்பர், அழகிய, பெரும்பான்மை, வாழ்த்து.

# 19. தைப்பொங்கல்

பொங்கல் !இன்று பொங்கல் !
புதுவருஷப் பொங்கல் !
மங்கலங்கள் பொங்க
மனையிலிடும் பொங்கல் ! 1

சந்தனத்தைக் குழைத்துத்
தரையைமெழு கிடுவோம் ;
சிந்துரத்தாற் கோலம்
சேரஅதில் வைப்போம். 2

எங்கள்கண பதியை
எழுந்தருளச் செய்வோம் ;
மங்கலநற் பொருள்கள்
வரிசைகொள வைப்போம். 3

பச்சைமஞ்சள் இஞ்சி
படைபடையாய் வைப்போம் ;
இச்சைதரு கரும்பும்
இடையிடையே நடுவோம். 4

அகில்விறகை மாட்டி
அடுப்பில்எரி மூட்டி;
பகவன்அடி போற்றிப்
பானையேற்றி வைப்போம். 5

தங்கத்தினுல் பானை
தரளம்என அரிசி;
பொங்கலும்பால் பொங்கல் !
புத்தமுதப் பொங்கல் ! 6

பானையுமே பொங்கிப்
பால்வழியும் வேளை,
வானம்எழக் குரவை
வழங்கிவலம் வருவோம். 7

கடவுட்கமு தளிப்போம்;
காகத்துக்கும் இடுவோம்;
உடனிருந்தெல் லோரும்
உண்டுமகிழ்ந் திடுவோம். 8

—கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை

## 20. கடிதம் எழுதுவது எப்படி?

(உரையாடல்)

**கோபாலன் :**—அம்மா, அண்ணனிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. அதற்குப் பதில் எழுத எனக்கு ஆவலாய் இருக்கிறது. இரண்டு கடிதங்கள் எழுதிப் பார்த்தேன். ஒன்றுகூடச் சரியாய் இல்லை. ஆகையால், அவற்றைக் கிழித்து எறிந்துவிட்டேன். எனக்குக் கடிதம் எழுதக் கற்றுக்கொடுங்கள்.

**தாயார் :**—கோபாலா, இப்பொழுதே கற்றுத்தருகிறேன். காகிதமும் எழுதுகோலும் எடுத்துக்கொள்.

**கோபா :**—இதோ எடுத்துக்கொண்டேன்.

**தாயார் :**—காகிதத்தின் தலைப்பில் வலப்பக்கத்தில் நமது வீட்டு முகவரியையும், இன்றைய தேதியையும் குறி. குறிக்கும்போது வீட்டு எண்ணுக்குப் பின்னும், தெரு, அஞ்சல் நிலையம், பேட்டை, ஊர் இவற்றின் பின்னும் காற்புள்ளியும், தேதிக்குப் பின் முற்றுப் புள்ளியும் வைக்க மறவாதே.

**கோபா :**—அம்மா, இதோ நீங்கள் கூறியபடியே எழுதியிருக்கிறேன்; பாருங்கள்.

**தாயார் :**—சரி. அடுத்தபடி, உன் அண்ணன் உன் எதிரில் இருந்தால், அவனை என்னவென்று கூப்பிடுவாய்?

**கோபா :** 'அண்ணா,' என்று கூப்பிடுவேன். அல்லது 'அன்புள்ள அண்ணா,' என்று கூப்பிடுவேன்.

**தாயார் :** சரி. அதை முகவரியின் கடைசி வரியை அடுத்துக் கடிதத்தின் இடப்புறத்தில் ஓர் அங்குல இடம் விட்டு எழுது.

**கோபா :** இதோ அவ்வாறே எழுதியிருக்கிறேன்; பாருங்கள்.

**தாயார் :** நல்லது! அடுத்தபடி நீ உன் அண்ணனுக்குக் கூற விரும்புவது என்ன?

**கோபா :** இங்கு நாங்கள் எல்லாரும் நலமாய் இருக்கிறோம் என்றும், அவருடைய நலத்தை அறிய ஆவலாக இருக்கிறேன் என்றும் கூற விரும்புகிறேன்.

**தாயார் :** அவ்வாறே எழுது.

**கோபா :** எழுதிவிட்டேன்.

**தாயார் :** நீ உன் அண்ணனுக்கு மேலும் தெரிவிக்க விரும்புவது என்ன?

**கோபா :** நான் எனது பள்ளியில் காலாண்டுத் தேர்வில் எல்லாப் பாடங்களிலும் உயர்ந்த மதிப்பெண் பெற்றிருப்பதைத் தெரிவிக்க விரும்புகிறேன்.

**தாயார் :** சரி. அதையும் எழுது.

**கோபா :** எழுதிவிட்டேன்; மேலே என்ன எழுதுவது?

**தாயார் :** உனக்கு ஏதோ வாங்கி வரும்படி உன் அண்ணனுக்கு எழுதவேண்டும் என்று சொல்லிக்கொண்டிருந்தாயே! அதை எழுது.

**கோபா :** ஆம்! மறந்துவிட்டேன்! டிசம்பர் மாதத்தில் அவர் வரும்போது எனக்கு ஒரு நல்ல பேனு வாங்கி வரும்படி எழுதுகிறேன்.

**தாயார் :** சரி. அப்படியே செய். மேலும் எழுதச் செய்தி இல்லாவிட்டால், கடிதத்தை முடித்துவிடு. நீ எழுதிய செய்திகளின் கீழே சிறிது இடம் விட்டு, வலப்புறத்தில் '**உம் அன்புள்ள தம்பி, வா. கோபாலன்**' என்று எழுது.

**கோபா :** நீங்கள் கூறியபடியே எழுதி முடித்துவிட்டேன். கடிதம் சரியாய் இருக்கிறதா, பாருங்கள்.

**தாயார் :** சரியாய் இருக்கிறது. இதுவே கடிதம் எழுதும் சரியான முறை. கடிதத்தை மடித்து உறையிலிட்டு ஒட்டு. உறையின்மீது உன் அண்ணன் முகவரியை எழுது. முகவரி தவறில்லாமல் இருக்க வேண்டும்; எழுத்தும் அழகாய் இருக்க வேண்டும். தெரிகிறதா?

**கோபா :** அம்மா, நீங்கள் கூறியபடியே செய்துவிட்டேன். இதைத் தபாற்பெட்டியிற் போட்டுவிட்டு வருகிறேன்.

## கோபாலன் எழுதிய கடிதம்

95, புதுத்தெரு,
மண்ணடி, சென்னை,
5–11–52.

அன்புள்ள அண்ணு,

வணக்கம்! இவ்விடம் எல்லாரும் நலம். அவ்விடமுள்ளார் நலம் அறிய ஆவல் உள்ளவனுய் இருக்கிறேன். நீங்கள் எழுதிய கடிதம் கிடைத்தது. சென்ற மாதம் நடைபெற்ற காலாண்டுத் தேர்வில் எல்லாப் பாடங்களிலும் உயர்ந்த மதிப்பெண் பெற்றேன். உங்களைக் கண்டு நெடுங்காலம் ஆகிவிட்டபடியால், டிசம்பர் மாதத்தில் கட்டாயம் வந்து போகும்படி கேட்டுக்கொள்கிறேன். நீங்கள் வரும்போது எனக்கு ஒருநல்ல பேஞ வாங்கிவரவேண்டும். அடிக்கடி கடிதம் எழுதும்படி கேட்டுக்கொள்கிறேன்.

உம் அன்புள்ள தம்பி,
வா. கோபாலன்.

முகவரி :

திருவாளர் வா. செழியர் அவர்கள்,
25, பெருமாள் கோவில் வீதி,
முத்தியாலுப்பேட்டை,
**புதுச்சேரி.**

## 21. மாதிரிக் கடிதங்கள் :

1

### அழைப்புக் கடிதம்

**சரசுவதி ஆரம்பப்பள்ளி மாணவர் கழகம்**

**(முத்தியாலுப் பேட்டை, சென்னை.)**

அன்புடையீர்,

எங்கள் கழகத்தின் ஆண்டு விழா, 8–11–52, சனிக்கிழமை, மாலை 4 மணிக்குக் கழக மண்டபத்தில் **டாக்டர் அ. சிதம்பரநாத செட்டியார் அவர்கள்** தலைமையில் நடைபெறும். **திரு. மாணிக்கவாசகம் பிள்ளையவர்கள், 'மாணவர் கடமை'** என்னும் பொருள்பற்றிப் பேசுவார்கள். இவ்விழாவுக்கு உங்கள் வரவைக் கோரும்

உங்கள் பணிவுள்ள,

சென்னை, 5–11–52.

**வீ. வேங்கடேசன்,**

செயலாளன்.

2

### வாணிகக் கடிதம்

12, வடக்கு மாசி வீதி,
மதுரை, 5—11—52.

மானேஜர்,
அஸோஸியேஷன் பப்ளிஷிங் ஹௌஸ்,
94–95, புதுத்தெரு, மண்ணடி, சென்னை—1.

அன்புடையீர்,

கீழே குறிக்கப்பட்டுள்ள புத்தகங்களை என் முகவரிக்கு **வி. பி.** தபால் மூலம் உடனே அனுப்பி வைக்கக் கோருகிறேன். பட்டியில் குறிக்கப்பட்டுள்ள வெளியார் பதிப்பக நூல்களையும் தயவு செய்து வாங்கியனுப்புமாறு வேண்டுகிறேன்.

அன்பன்,

**க. இராமசந்திரன்**

**புத்தக விவரம்:**

1. எட்டாம் வகுப்புக்குரிய ஆட்சி முறையும் உடல் நல முறையும்—த. சே. உமாபதி அவர்கள் எழுதியது. 2 படிகள்
2. முதல் படிவத்துக்குரிய சங்கக் கணக்கு நூல்—குமாரி. வி. எஸ். லீலா அம்மையார் எழுதியது. 2 படிகள்
3. இரண்டாம் பாரம்—பொதுப் பகுதிக்குரிய நேஷனல் தமிழ் வாசகம்—டாக்டர் மா. இராசமாணிக்கனார் எழுதியது 3 படிகள்.

**முகவரி :**

மானேஜர் அவர்கள்,
அஸோஸியேஷன் பப்ளிஷிங் ஹௌஸ்,
94—95, புதுத்தெரு, மண்ணடி,
**சென்னை-1.**

**3**

## விண்ணப்பக் கடிதம்

மேட்டுப் பாளையம் கிராமம்,
பொன்னேரித் தாலூக்கா,
**செங்கற்பட்டு மாவட்டம்,**
5—11—'52.

செங்கற்பட்டு மாவட்டம், பொன்னேரித் தாலூக்காத் தாசில்தார் அவர்களுக்கு மேட்டுப்-பாளையம் கிராமம் கணக்க இராசாப் பிள்ளை மகன் சுப்பிரமணியப் பிள்ளை பணிவுடன் எழுதும் விண்-ணப்பம் :

எங்கள் கிராமத்தை அடுத்துள்ள **ஆலேச்சேரி** என்னும் கிராமத்துக் கணக்கப்பிள்ளை சென்ற

மாதம் தமது வேலையை இராசிநாமாச் செய்துவிட்டபடியால், அப்பதவியில் என்னை அமர்த்துமாறு உங்களைத் தாழ்மையுடன் வேண்டுகிறேன்.

நான் எட்டாம் வகுப்பு அரசாங்கப் பரீட்சையில் தேறியிருக்கிறேன்; அன்றியும், சென்ற ஆண்டில் நடைபெற்ற கணக்கப்பிள்ளை பரீட்சையிலும் தேறியுள்ளேன். என் பாட்டனூர் **இரத்தின சபாபதிப் பிள்ளை** அதே கிராமத்தின் கணக்கப்பிள்ளையாய் வேலை பார்த்திருந்தார்.

அவ்வேலை கிடைக்கும் பேற்றை யான் பெற்றால், எனது மனச்சாட்சிக்கும் அரசாங்கத்துக்கும் விரோதமில்லாமல் எனது கடமையைச் செய்வேன் என்று உறுதி கூறுகின்றேன்.

உங்கள் பணிவுள்ள,

**இ. சுப்பிரமணியப் பிள்ளை.**

**அருஞ்சொற்பொருள் :**

ஆவல் – ஆசை, எறிந்துவிட்டேன் – போட்டுவிட்டேன், முகவரி- விலாசம், தேர்வு-பரீட்சை, மலிவாக–நயமாக, செய்தி–சமாசாரம், உறை-பை, கட்டாயம்-தவறாமல், கழகம்–சபை, மண்டபம்–கூடம், கோரும்–வேண்டும், பதிப்பகம்–புஸ்தகம் வெளியிடும் காரியாலயம், விண்ணப்பம் – வேண்டுகோள், தாலூக்கா–ஜில்லாவின் உட்பிரிவு, பதவி–உத்தியோகம்.

**பயிற்சி :**

1. உனது பள்ளிக் கழகக் கூட்டம் ஒன்றுக்குத் தலைமை வகிக்குமாறு வேண்டி அறிஞர் ஒருவருக்குக் கடிதம் எழுது.
2. நீ வசிக்கும் வீதியில் ஒரு தண்ணீர்க் குழாய் அமைத்துத் தரும்படி நகராண்மைக் கழகத் தலைவருக்கு ஒரு வேண்டுகோள் கடிதம் எழுது.



## 22. பரமார்த்த குருவும் சீடர்களும்

1. அவிவேக பூரண குரு என்ற ஆசாரியர் ஒருவர் இருந்தார். பரமார்த்த குரு என்பது அவருக்கு வழங்கிய மற்றொரு பெயர். அவர் மடத்தில் **மட்டி, மடயன், பேதை, மிலேச்சன், மூடன்** என்ற சீடர் ஐவர் இருந்தனர். அவர்கள் தங்கள் குருவுடன் ஒரு நாள் ஓர் ஊருக்குச் சென்றார்கள். வழியில் ஒரு யாற்றைக் கடக்க நேர்ந்தது.

2. குரு, யாற்றில் இறங்கப் பயந்து, "இது மிகவும் பொல்லாத நதி! இது விழித்திருக்கும் வேளையில் இதைக் கடந்து போகக் கூடாது. மிலேச்சா, யாறு நித்திரை செய்கிறதா, விழித்திருக்கிறதா? சோதித்துப் பார்," என்று கூறினர்.

3. மிலேச்சன் குரு மொழியைச் சிரமேற்கொண்டு, தான் சுருட்டுப் பற்ற வைக்கக் கையில் வைத்திருந்த கொள்ளிக்கட்டையைக் கொண்டு போய், யாற்றில் இறங்காமல், கரையிலிருந்தபடி

யாற்றில் தோய்த்தான். தண்ணீர் சுரீரென்று புகைந்தது கண்டு, மிலேச்சன் பதறிக் கீழேவிழுந்து, பதைத்து உதைத்துக்கொண்டு, மெல்ல எழுந்து, அலறிக் குளறி அழுதுகொண்டு குருவை அணுகி, "ஐயா, நதியைக் கடக்க இது தருணமன்று! அது விழித்திருக்கிறது! நான் தொட்டவுடனே நாகம் போலச் சீறிக்கோபித்து இரைந்தெழுந்து என்னைக் கொல்ல வந்தது! ஆனால், நான் உங்கள் பரம கிருபையினால் உயிர் பிழைத்து மீண்டு வந்தது மிக-வும் அதிசயம்!" என்று கூறினான்.

4. அதைக் கேட்ட குரு மூர்ச்சித்துப் பின்பு தெளிந்து, "அப்பா, தெய்வ சங்கற்பத்தை யார் அறியக் கூடும்! யாறு கண்ணுறங்கும் வரையில் நாம் காத்திருப்போம்," என்று கூறினார்.

5. சற்று நேரம் கழித்தபின், குரு சீடனை நோக்கி, "நதி விழித்திருக்கிறதா, நித்திரை செய்கிறதா, சோதித்துப் பார்," என்று கட்டளையிட்டார். உடனே மடயன் அணைந்த கொள்ளிக் கட்டையை நீரில் தோய்த்துப் பார்த்தான். நீரில் புகை கிளம்பாதது கண்ட அவன், மிகவும் களிப்போடு ஓடி வந்து, "இதுதான் நல்ல சமயம்! இப்படிப்பட்ட சமயம் இனிக் கிட்டாது! வாயைத் திறவாமல் வாருங்கள்! யாற்றுக்கு நல்ல நித்திரை வேளையாய் இருக்கிறது!" என்று பரபரப்புடன் கூறினான்.

6. உடனே எல்லாரும் எழுந்து, யாற்றை அணுகினர். அவர்கள் வாய் திறவாமல், ஒருவரை ஒருவர் பற்றிக்கொண்டு, அடிமேல் அடி வைத்து யாற்றைக் கடந்துவிட்டார்கள். கரையேறிய-வுடனே, மூடன் மற்றவரை நோக்கி, "நாமெல்-

லாரும் அபாயமில்லாமல் வந்து சேர்ந்தோமா? எண்ணிப் பார்ப்போம்,'' என்று கூறினன். கண-நேரமும் தாமதியாமல், தன்னைக் கூட்டாமல் மற்ற-வரை எண்ணினன். எண்ணிய போது ஐவரே இருக்கக் கண்டு, "ஐயையோ! இது என்ன அநி-யாயம்! ஒருவன் யாற்ருேடே போய்விட்டானே! ஐந்து பேர் மட்டும் இருக்கிருேமே!'' என்று கதறி-ஞன். அது கண்ட குரு, அவனை அழாதிருக்குமாறு கூறி, எல்லாரையும் வரிசையாக நிற்கச் செய்து, அவரே ஒரு முறைக்கு மும்முறை எண்ணிக் கணக்-கிட்டார். அவரும் தம்மைக் கூட்டாமல் எண்ணி, ஐவர் மட்டுமே இருக்கக் கண்டு, அலறி அழத் தொடங்கினுர். எல்லாரும் சேர்ந்து நதியை வாயில் வந்தபடி வைதுகொண்டு அழத் தொடங்கினர்.

7. அத்தருணம் வழிப்போக்கன் ஒருவன் அங்கு வந்தான். அவன் அவர்கள் அழுவதைக்கண்டு, காரணம் கேட்டுணர்ந்து, அவர்களுடைய மூடத்-தனத்தை அறிந்தான். அவன் அவர்களை நோக்கி, "அடே அப்பா! இது மகா பிரயாசையுள்ள காரியம்! இது என்னலன்றி மற்றெவராலும் முடியாது! நான் மந்திரத்தில் வல்லவன். நீங்கள் எனக்கு நல்ல வெகுமதி தருவதாஞல், யாற்ருேடே போனவனை அரைக்கணத்தில் அழைக்கின்றேன்!'' என்ருன்.

8. அது கேட்ட குரு, "அப்பா, நாங்கள் நாற்-பத்தைந்து பணம் வழிச்செலவுக்காக வைத்திருக்-கிருேம். அதைப் பெற்றுக்கொண்டு யாற்ருேடே போனவனை அழைத்துத் தர வேண்டுகின்ருேம்,'' என்று கூறி அவனடியில் விழுந்தார்.

9. வழிப்போக்கன், 'வந்த காசுக்கு வட்ட-மில்லை' என்று எண்ணிக்கொண்டு, "அப்படியே ஆகட்டும். இதோ என் கையிலிருக்கும் தடி மந்தி-ரக்கோல். நீங்கள் வரிசையாக நின்று பிரார்த்தனை செலுத்துவதுபோலக் கும்பிட்டுக் குனிந்து நின்று, இக்கோலால் ஆளுக்கு ஓர் அடிபட்டுக்கொண்டு, உடனே, அவனவன் தன் தன் பெயரைச் சொல்லி எண்ண வேண்டும். அப்போது நீங்கள் அறுவரும் இங்கு இருப்பதைக் காட்டுவேன்," என்று கூறி-னான். அவர்கள் அதற்கு இசைந்தார்கள்.

10. மந்திரவாதி அவர்களை ஒரே வரிசை-யாக நிறுத்தி, முதலில் குருவின் முதுகில் கோலால் ஓர் அடி கொடுத்தான். அவர் துள்ளி விழுந்து, "அப்பாடா! நான் பரமார்த்த குரு," என்றார். மந்திரவாதி, "ஒன்று," என எண்ணினான். பிறகு அவன் அவ்வாறே மற்றவர் ஐவரையும் அடித்துக் கணக்கெண்ணி, அறுவர் இருப்பதை அவர்களுக்குக் காட்டினான். அப்போது அவர்கள் அடைந்த ஆனந்-தத்துக்கு அளவில்லை. மந்திரவாதியும் மகிழ்ச்சி-யுடன் பணத்தைக் கொண்டு சென்றான்.

**அருஞ்சொற்பொருள்:**

ஆசாரியர்–குரு, அவிவேகம் – அறிவில்லாமை, சிரமேற் கொண்டு–தலை மீது வைத்து, அணுகி–நெருங்கி, தருணமன்று–நேரமன்று, இரைந்து–கூச்சலிட்டு, கிருபை–கருணை, அதிசயம்–ஆச்சரியம், கண்ணுறங்கு–நித்திரை செய், களிப்பு–சந்தோஷம், கிட்டாது–கிடைக்காது, பரபரப்பாக – அவசரமாக, பற்றிக் கொண்டு–பிடித்துக்கொண்டு, கணநேரம்–வினாடி நேரம், கதறி-னான்–கூக்குரலிட்டு அழுதான், வழிப்போக்கன் – பிரயாணி, பிரயாசை – முயற்சி, வெகுமதி–பரிசு, இசைந்தார்கள்–சம்மதித்-தார்கள்.

## பயிற்சி :

**1. விடை எழுது :—**

அ. பரமார்த்த குருவுக்கு வழங்கிய வேறு பெயர் யாது ?
ஆ. பரமார்த்த குருவின் சீடர் யாவர் ?
இ. அவர்கள் யாற்றைக் கடக்க ஏன் பயந்தார்கள் ?
ஈ. யாறு நித்திரை செய்கிறதா என்பதை அறிய அவர்கள் நடத்திய சோதனை யாது?
உ. அவர்கள் தங்களுள் ஒருவனை யாறு விழுங்கிவிட்டது என்று ஏன் நிச்சயித்தார்கள் ?
ஊ. வழிப்போக்கன் அவர்கள் அறுவர் என்பதை அவர்களுக்குக் காட்டக் கையாண்ட முறை யாது ?

**2. இவற்றைத் தெரிந்துகொள் :—**

**பெயர் வினை வேறுபாடு:**

| சொல் | பெயர்ப்பொருள் | வினைப்பொருள் |
|---|---|---|
| படி | பூமி, முகத்தலளவை | வாசி. |
| படை | சேனை | உற்பத்தி செய். படையல் இடு. |
| பணி | வேலை | வணங்கு. |
| பரப்பு | விஸ்தீரணம் | விரி. |
| பழி | குற்றம் | வசை கூறு. |
| பறி | மீன்இடும் ஓலைப்பை | மலர்பறி. |
| பற்று | அன்பு (நாட்டுப் பற்று) | பிடி. |
| பாய் | படுக்கும் பாய் | தாவு. |
| பிடி | கைப்பிடி | கையால் பிடி. |
| பிணி | வியாதி | கட்டு. |
| பிழை | குற்றம் | வாழ்ந்திரு. |

**3. எதிர்ச்சொற்கள் எழுது :—**

பொல்லாத, விழித்திரு, தொலைவு, கண்ணுறங்கு, அணைந்த, தாமதம், அநியாயம், வசை, காட்டினான்.

**4. இவற்றை அமைத்து வாக்கியங்கள் எழுது :—**

ஆசாரியர், சோதித்தான், கொள்ளிக்கட்டை, பதைபதைத்து, மூர்ச்சித்து, பரபரப்பு, அநியாயம், அணைந்த, பிரார்த்தனை, இசைந்தார்கள்.

# 23. பத்திரிகைச் செய்தி—II

## (மனத்துள் படித்தல்)

*[குறிப்பு ;—கீழ் வரும் செய்தியை மனத்துள் படித்துச் செய்தியின் கீழே தரப்பட்டுள்ள வினுக்களுக்கு விடை எழுது.]*

## அமெரிக்கன் ரிப்போர்ட்டர்

அக். 10, 1952.

**சமய வாழ்க்கையைப்பற்றி ஐசனேவர் ஸ்டீவன்சன் கருத்துக்கள் :**

*[ஐசனேவர், ஸ்டீவன்சன் என்பவர் இருவரும் சமீபத்தில் அமெரிக்காவில் நடைபெற்ற ஜனதிபதி தேர்தலுக்குப் போட்டியிட்டவர். ஐசனேவரே ஜனதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.]*

**ஐசனேவர் கருத்துக்கள் :**

மதப் பற்றுள்ள குடும்பத்தில் பிறந்தது எனக்குக் கிடைத்த பாக்கியம். என் தந்தையாரும் தாயாரும், 'கடவுளுக்குப் பயப்படுவதே ஞானத்தின் ஆரம்பம்,' என்பதை நம்பியவர்கள்.

வரட்சி ஏற்பட்டது : வெட்டுக்கிளிகள் கேடு விளைத்தன. ஆயினும், என் தந்தையார் முணுமுணுத்ததை நான் கேட்டதில்லை. நாங்கள் இருந்த இடத்தைவிட்டுப் பெயர்ந்து வேறு இடம் சென்று தோல்வியைப் பற்றிய எண்ணம் சிறிதுமின்றிப் புதிதாக வாழ்க்கையைத் தொடங்கினேம். இத்தகைய தெய்வ பத்தியுள்ள குடும்பங்களின் வரலாறே நமது நாட்டு வரலாற்றை ஆக்கியது.

சுதந்தர அரசாங்கம் தெய்வ நம்பிக்கை உள்ளதாகத்தான் இருக்கும். அங்குக் குடியேறிய நம் முன்னேர் தங்களைப் படைத்த கடவுளைக் குறிப்-

பிட்டுத் தங்கள் புரட்சியை விளக்கினார்கள். அவர்கள் தங்கள் மத நம்பிக்கையைப் பத்திரங்களில் எழுதிவைத்தார்கள்; நம் நாணயங்களில் தங்கள் தெய்வ நம்பிக்கையைப் பொறித்து வைத்தார்கள். நம் அமைப்புக்களுக்கு அதனையே அடிப்படையாகக் கொண்டார்கள். உரிமைச் சாசனத்தில் வழிபாட்டு உரிமையைப்பற்றி வரைந்தார்கள்.

*   *   *

'பத்தியுள்ளவர்களே கொடுமையை வென்று சுதந்தரம் பெறுவார்கள் ; மற்றவர்களுக்கும் சுதந்தரம் அளிப்பார்கள்,' என்பதை நம் முன்னோர் செய்து காட்டினர்.

*   *   *

யுத்த காலத்தில் என் வாழ்க்கையில் முக்கியமான ஒரு தீர்மானம் செய்ய வேண்டியதாயிற்று. பகைவரது நாட்டுக்கு எதிரே நம் போர்க் கப்பல்களும் போர் வீரர்களும் அணிவகுப்பதை இருபத்து நான்கு மணி நேரம் நிறுத்திவைக்கத் தீர்மானித்தேன். அதன் விளைவு யாதாகும் என்பதை அச்சமயத்தில் யாராலும் காண முடியாது.

அடுத்த இருபத்து நான்கு மணி நேரம் நிகழ்ந்தவை, எல்லா வல்லமையும் இரக்கமும் நிறைந்த கடவுள் ஒருவர் உளர் என்பதை நிலை நாட்டிவிட்டன. முக்கியமான சமயங்களில் தீர்மானங்கள் செய்வதற்கு மதப்பற்றுத் தைரியம் அளிக்கிறது ; மற்றக் காரியங்களைக் கடவுளுக்கு ஒப்புவிக்க நம்—

பிக்கை ஊட்டுகிறது. தன்னிடத்தில் நம்பிக்கையும், கடவுளிடத்தில் நம்பிக்கையும் உள்ளவன் தன் கடமைகளை நிறைவேற்றும் போது அமைதியைக் காண்பான்.

**ஸ்டீவன்சன் கருத்துக்கள் :**

நமது நாட்டில் உள்ள பெருஞ்செல்வம் மத நம்பிக்கையே என்பது எனது எண்ணம். நம் மக்களுக்கு ஊக்கமூட்டுவதும் அதுவே. அது பல வகைகளில் வாழ்க்கையில் காட்சியளிக்கும். ஆயி-னும், அதற்கு வாய்மொழியில் விளக்கம் கூற இயலாதார் பலர் உளர்.

நம்மைப் படைத்தவர் ஒருவர் உளர் என்று நாம் நம்புகிறோம். அவரே நமக்கு உயிரளித்தவர்; நன்மை தீமையைப் பகுத்தறியும் ஆற்றலும் கடமை யும் தந்தவர்; தீமையை எதிர்க்கவும், நன்மையைச் செய்யவும் ஆற்றல் அளிப்பவர்.

வாழ்க்கையின் மற்றத் துறைகளில் நாம் செய்-வது போல, நமது அரசியல் கடமைகளிலும் அறத்-தையும், நன்மையையும், குறிக்கோளையும் கடைப்-பிடிப்பது மட்டும் போதாது. ஆபத்து நேரும் என்று அஞ்சாமல், நாம் துணிந்து அறத்தை நிலை நாட்டுதல் வேண்டும்.

மதத்தால் நாம் பெற்ற சிறந்த நலன் ஒன்று உண்டு: ஒழுக்கநிலையில் குழப்பம் நேராதவாறு பாதுகாப்பளிக்கின்றது மதம்.

**நமது குடியரசின் வலிமைக்கும், பாதுகாப்-புக்கும் அடிப்படையாய் இருப்பது நமது செல்-வம் அன்று; நமது உற்பத்தித் திறன் அன்று;**

நமது படை வலிமையும் அன்று ; நம் மக்களின் மத நம்பிக்கையே நமக்கு ஆக்கம் அளிப்ப-தாகும்.

**வினாக்கள் :**

1. இச்செய்தி எப்பத்திரிக்கையில் வெளியானது ?
2. ஐசனேவர் என்பவர் யார் ?
3. ஸ்டீவன்சன் என்பவர் யார் ?
4. ஐசனேவரின் பெற்றோர் எதை நம்பியவர் ?
5. ஐசனேவரின் தந்தையார் சமயப் பற்று மிக்கவர் என்பதற்கு ஐசனேவர் காட்டும் உதாரணம் யாது ?
6. அமெரிக்காவில் மத நம்பிக்கை முதலிடம் வகிப்பது எதனுல் அறியப்படுகிறது ?
7. ஐசனேவர் வாழ்க்கையில் எந்த நிகழ்ச்சி கடவுள் ஒருவர் உளர் என்பதை நிலைநாட்டிக் காட்டியது ?
8. மத நம்பிக்கையைப்பற்றி ஸ்டீவன்சன் கருத்துக்கள் யாவை ?

## 24. கட்டுரை வரைவது எப்படி?

(உரையாடல்)

**வேலன் :** அப்பா, எங்கள் ஆசிரியர் தென்னை மரத்தைப்பற்றி ஒரு கட்டுரை எழுதிக்கொண்டு வரச் சொன்னார். கட்டுரை என்பது என்ன என்பதும், அதை எப்படி எழுதுவது என்பதும் எனக்குத் தெரியவில்லை. தயவு செய்து சொல்லிக்கொடுங்கள், அப்பா.

**தந்தை :** வேலா, சொல்கிறேன்; கவனி: ஒரு பொருளைக் குறித்தோ, ஒரு விஷயத்தைக் குறித்தோ நாம் சொல்ல விரும்பும் கருத்துக்களை ஒன்றோடொன்று தொடர்புபடுத்தி எழுதுவதே '**கட்டுரை**' எனப்படும். '**வியாசம்**' என்பது கட்டுரைக்கு வழங்கும் வேறு பெயர். பொருள் என்பது பசு, தென்னை போன்றது. விஷயம் என்பது தமிழ்மொழி, கல்வி போன்றது. ஒரு பொருளைக் குறித்துக் கட்டுரை எழுத வேண்டுமானால், முதலில் அதைப்பற்றி நன்கு சிந்திக்க வேண்டும்; சிந்தித்துச் சிந்தித்து மனத்தில் தோன்றும் கருத்துக்களைக் குறிக்க வேண்டும்; பிறகு அக்கருத்துக்களில் எது முன் இருக்கவேண்டும், எது பின்னிருக்க வேண்டும் என்பதைக் கவனித்துக் கருத்துக்களை வரிசைப்படுத்த வேண்டும். கட்டுரையில் இடம் பெறும் ஒவ்வொரு கருத்தும் ஒவ்வொரு தனிப் பத்தியாக அமைய வேண்டும்.

**வேலன் :** அப்பா, கட்டுரை என்பது என்ன என்பதை அறிந்தேன்; அதை எப்படி எழுத வேண்டும் என்பதையும் அறிந்தேன். ஆனால்,

தென்னை மரத்தைப் பற்றிக் கட்டுரை எழுதுவது எப்படி என்பதை விளக்க வேண்டும்.

**தந்தை :** நல்லது. அப்படியே செய்யலாம். தென்னை மரத்தை நீ பார்த்திருக்கிறாய் அல்லவா? ஆதலால், முதலில் அதன் தோற்றத்தைப் பற்றிக் குறிப்பிடுவது அவசியம். தென்னை மரம் எல்லா இடங்களிலும் வளர்வதில்லை; சில இடங்களில் மட்டுமே வளரும். ஆதலால், அது எப்படிப்பட்ட இடங்களில் வளரும் என்பதைக் குறிக்க வேண்டும். தென்னையில் ஒவ்வொரு பாகமும் நமக்குப் பயன் படுகிறது. ஆதலால், அதன் பயன்களைக் குறிக்க வேண்டும். நான் கூறியவற்றை மனத்துட்கொண்டு கட்டுரையை எழுதிக்கொண்டு வா, பார்க்கலாம்.

**வேலன் :** இதோ எழுதிக்கொண்டு வருகிறேன் அப்பா.

### வேலன் எழுதிய கட்டுரை :

1. நமது நாட்டில் தென்னை மரத்தை எங்கும் காணலாம். அது சுமார் ஐம்பதடி உயரத்துக்கு மேலும் வளரும். தென்னைக்குக் கிளையும் இல்லை; இலையும் இல்லை; மட்டைகளும் ஓலைகளும் உண்டு.
2. தென்னை மணற்பாங்கான இடங்களில் நன்றாய் வளரும். அதற்கு உப்பங்காற்று மிகவும் நல்லது.
3. தென்னையின் ஒவ்வொரு பாகமும் உபயோகப்படுகிறது. அதன் அடி மரத்தை வாரைகளாக அறுத்து வீடுகள் கட்டலாம். அதன் ஓலையைக் கீற்றாக முடைந்து கூரை வேயலாம். அதன் இளநீர் குடிப்பதற்கு உருசியாய் இருக்கும். தேங்காய் தின்பண்டங்கள் செய்யவும்,

காய்கறி சமைக்கவும் பயன்படுகிறது. கொப்பறையிலிருந்து தேங்காய் நெய் கிடைக்கிறது. தென்னையின் பாளையைச் சீவிச் சாறு இறக்கி, வெல்லம் காய்ச்சலாம். தென்னையைப் போல உபயோகமுள்ள மரம் வேறெதுவும் இல்லை என்றே கூறலாம்.

### அருஞ்சொற்பொருள்:

கருத்து – எண்ணம், தொடர்பு – சம்பந்தம், சிந்திக்க–யோசிக்க, தோற்றம்–உருவம், குறிப்பிடு–தெரிவி, பாகம்–சினை அல்லது உறுப்பு, கொப்பறை–முற்றி உலர்ந்த தேங்காய்ப் பருப்பு.

### பயிற்சி:

**1. விடை எழுது :—**

அ. 'கட்டுரை' என்பது என்ன?

ஆ. 'பத்தி' என்பது என்ன?

இ. கட்டுரை எழுதுவதற்கு முன் செய்ய வேண்டுவது யாது?

ஈ. கீழ்க்குறித்த பொருள்களைப் பற்றிச் சிறு கட்டுரை எழுது :—

(1) பசு, (2) யானை, (3) பனை மரம், (4) கிளி

**2. இவற்றைத் தெரிந்துகொள் :—**

**பெயர் வினை வேறுபாடு:**

| சொல் | பெயர்ப்பொருள் | வினைப்பொருள் |
|---|---|---|
| பெயர் | நாமம் | இடம் விட்டு இடம்போ. |
| பெருக்கு | வெள்ளம் | பெருகச் செய். |
| பொடி | புழுதி | பொடி செய். |
| பொறி | இயந்திரம், அடையாளம். | சித்திரி, எழுது. |
| போக்கு | வழி | போகச் செய். |
| மறு | குற்றம் | தடுத்துக் கூறு. |
| மறை | இரகசியம், வேதம். | மறைத்து வை. |
| வட்டி | வட்டிப்பணம் | பரிமாறு. |
| வந்தனம் | வணக்கம் | வந்தோம். |

# 25. கைத்திறன்

வெயில்வரினும் மழைவரினும் விரிகுடையாம் கையே!
வெயர்வைவரின் ஆற்றுசிறு விசிறியதாம் கையே!
துயிலவொரு மகவைத்தொட்டில் இட்டசைக்கும் கையே!
துரிதமுடன் எழுதவொரு தூவிகொளும் கையே! 1

இனியசெந்நெற் புலம்உழுதற் கேர்பிடிக்கும் கையே!
இன்னிசைகள் எழுப்பவீணை ஏந்துமெழிற் கையே!
கனியுதிர்ப்பக் கல்லெறியும் கவண்பிடிக்கும் கையே!
கண்களிப்பப் படமெழுதிக் காட்டும்என்றன் கையே! 2

மல்லயுத்தம் செய்வதற்கு வந்துநிற்கும் கையே!
வாள்பிடித்து வகைவகையாய் மரம்அறுக்கும் கையே!
நெல்லைக்குற்றும் அரிசிதீட்டும் நொய்கொழிக்கும் கையே!
நேயரொடு பாண்டியாடி நிதம்ஜெயிக்கும் கையே! 3

நாடியசீர் நாடடைய ராட்டுருட்டும் கையே!
நல்லகதர் நெய்யமிகு வல்லமைகொள் கையே!
பாடியவாய் தேனூறும் பாரதியார் பாடல்
பண்ணமையப் பாடுதற்குப் பாணிகொட்டுங் கையே! 4

அழைப்பதற்கும் அகற்றுதற்கும் அபிநயிக்கும் கையே!
ஆக்குதற்கும் அழிப்பதற்கும் ஆற்றல்பெறும் கையே!
உழைப்பதற்கும் ஊட்டுதற்கும் ஊக்கமுறும் கையே!
உதவுதற்கும் ஏற்பதற்கும் உரிமைகொளும் கையே! 5

மக்களைத்தம் ஒக்கல்வைத்து வளர்த்திடுமென் கையே!
வண்ணமலர் தலைக்கணிந்து வாசமூட்டுங் கையே!
தக்கபெரி யோர்க்குமிகத் தான்வணங்கும் கையே!
தரணியிலுன் திறமையெலாம் சாற்றலெளி தலவே. 6

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

**குறிப்புரை :**

1. துயில-தூங்க, மகவை-குழந்தையை, தூவி எழுது கோல்.
2. புலம்-வயல், கவண்-கல்லெறி கயிறு.
3. மல்லயுத்தம்-குஸ்தி, பாண்டி -பல்லாங்குழி.
4. ராட்டு-கைராட்டினம், பண்-இராகம், பாணி-தாளம்.
5. அபிநயிக்கும்-சைகை செய்யும், ஆற்றல்-வலிமை, ஊட்டுதல் - உண்ணச் செய்தல், ஏற்பது - பிறரிடமிருந்து பெறுவது.
6. ஒக்கல்-இடுப்பு, வண்ணம்-அழகு, வாசம்-வாசனை, சாற்றல்-சொல்லுதல்.





# 26. இராசராசன்

1. தமிழ் நாடு, பண்டைக்காலத்தில் மூன்று பெரும்பகுதிகளாய்ப் பிரிந்திருந்தது. அவை **சேரநாடு, சோழநாடு, பாண்டிநாடு** என வழங்கப்பட்டன. அவற்றை ஆண்ட அரசர் சேர **சோழ பாண்டியர்** எனவும், முடியுடை மூவேந்தர் எனவும் வழங்கப்பட்டனர். அவர்கள், கல்வி, அறிவு, வீரம், அருள், கொடை, ஆட்சித்திறம் முதலியவற்றில் மிகவும் சிறந்து விளங்கினார்கள்.

2. சோழர்களுள் ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்த **கரிகாலன்**, தமிழ் நாட்டின் முப்பெரும் பிரிவுகளையும் ஒருங்கே ஆண்ட பேரரசன். அவனுக்குப் பின், தமிழ் நாட்டை ஒன்றாக்கி ஆண்ட சோழ மன்னன் **இராசராசன்**. இவன் சற்றேறக்குறைய இருபத்தொன்பது ஆண்டுகள் ஆட்சி செலுத்தியுள்ளான். இவன் '**இராசகேசரி**' என்னும் பட்டம் தரித்தவன்; சிறந்த சிவபத்தன். இவன் சிவபத்தி காரணமாகச் '**சிவபாத சேகரன்**'

என்றும் வழங்கப்பட்டான். **அருள்மொழித் தேவன், மும்முடிச் சோழன், ஜயங்கொண்ட சோழன், இராசமார்த்தாண்டன், நிகரிலிசோழன்** என்னும் வேறு பெயர்களும் இவனுக்கு உண்டு.

3. இராசராசன் தரைப்படையையும் கடற்படையையும் பெருக்குவதில் பெருநாட்டம் செலுத்தினன்; இரு வகைப் போர் முறையிலும் தமிழ் வீரர்களுக்குத் தக்க பயிற்சி அளித்தான்.

4. இராசராசன் தோள்வலியும் படைவலியும் மிக்கவன்; சேரநாட்டையும் பாண்டி நாட்டையும் ஒரே சமயத்தில் தாக்கி வெற்றி பெற அவாக் கொண்டு, போர் தொடங்கினன். இவன் படையில் ஒரு பகுதி பாண்டி நாட்டின் மீதும், மற்றொரு பகுதி சேர நாட்டின் மீதும் பாய்ந்தன. நான்கு ஆண்டுகள் வரை இப்போர் நீடித்தது. இறுதியில் இராசராசன் படைகள் முழு வெற்றி பெற்றன. சேரநாடு பிடிபட்டதும், சோழர் படைகள் பாண்டி நாட்டின் மீது திரும்பின. பாண்டியர் . படையும் தோல்வி யடைந்தது. இராசராசன் பாண்டி நாட்டையும் சேரநாட்டையும் பணிய வைத்துத் தன் ஆட்சிக்கு அடிப்படுத்தினன்.

5. இராசராசன் வேங்கைநாட்டிற்கு வடக்கே இருந்த **கலிங்க நாட்டை**யும் வென்றான்; அங்கிருந்த மகேந்திர மலைமீது தன் வெற்றித் தூண் ஒன்றை நிறுவினன்; அதன் பின்னர், மைசூர் நாட்டின் கீழ்ப்பகுதியும், அதனைச் சூழ்ந்த நிலப்பகுதியுமான **கங்கபாடி**யைத் தாக்கி வென்றான்; அதன் தலைநகரமான தழைக்காட்டிற்கு '**இராசராசபுரம்**' என்னும் பெயர் சூட்டினன்; பிறகு, மைசூரை

அடுத்திருந்த **நுளம்பபாடி**யையும், அதனை அடுத்திருந்த **தடிகை பாடி**யையும் வென்றான். சென்ற இடமெல்லாம் வெற்றியையன்றி வேறு அறியாத இராசராசன், மேலும் தன் ஆட்சியை விரிவாக்க விரும்பினான்; கொங்கு நாட்டையும், குடகு நாட்டையும் வென்றான்.

6. இராசராசன் சிறப்புடன் ஆண்ட காலத்தில், **ஈழமண்டலம்** எனப்படும் இலங்கையை ஆண்ட **மஹிந்தன்** என்னும் சிங்கள மன்னன், கலகம் விளைத்தான். அவன் இராசராசனைத் தோற்கடிக்க விரும்பி, பாண்டியனுக்கும் சேரனுக்கும் படைகளைக் கொடுத்து உதவியிருந்தான். இவற்றை அறிந்த இராசராசன், இலங்கை சென்று, போர் நடத்தி, அதன் தலைநகராகிய **அநுராதபுர**த்தை அழித்தான்; **பொலந்நருவா** என்னும் வேறு ஓர் ஊரைத் தலைநகராக்கினான். தோற்ற சிங்கள மன்னன் புறங்காட்டி ஓடித் தென்கிழக்குப் பகுதியில் இருந்த மலைப் பகுதியில் ஒளிந்துகொண்டான். இராசராசன் தான் வென்ற இலங்கை நாட்டிற்கு '**மும்முடிச் சோழ மண்டலம்**' எனப் பெயரிட்டான். அங்குத் தன் தாயாரின் நினைவாக '**வானவன் மாதேவீச்சரம்**' எனப் பெயர் வழங்கி ஓர் அழகிய சிவன் கோவிலை எடுப்பித்தான்.

7. இவ்வண்ணம் இராசராசன் பல நாடுகளை வென்று தன் நாட்டைப் பெருக்கிப் பெரும்புகழ் அடைந்தபடியால், இவனுக்கு '**ஜயங்கொண்ட சோழன்**' என்னும்பெயர் வழங்கலாயிற்று. எனவே, இராசராசன், தொண்டை மண்டலத்திற்கு, '**ஜயங்கொண்ட சோழ மண்டலம்**' என்னும் பெயர்

சூட்டினன் ; அப்பெயரால் திருச்சி மாவட்டத்தில் ஓர் ஊரையும் நிறுவினன்.

8. இராசராசன் போரில் பேராண்மையுடன் விளங்கியது போலவே, ஆட்சி புரிவதிலும் மிகுந்த திறமையுடன் விளங்கினன். சோழப்பெருநாட்டைப் பல மண்டலங்களாகப் பிரித்தான்; மண்டலங்களில் அரசப் பிரதிநிதிகளை நியமித்தான்; நிலங்களை அளந்து கணக்கிட்டு வரி விதித்தான். அதனல் '**உலகளந்தான்**' என்னும் பெயர் இவனுக்கு வழங்கியது. கிராம ஆட்சிமுறை கிராமத்தின் பொறுப்பில் விடப்பட்டிருந்தது. கிராம ஆட்சிக்குரிய அவையினரை ஊர் மக்கள் தேர்ந்தெடுத்தனர். அவ்வவையினர், 'ஆளுங்கணத்தார்' என வழங்கப்பட்டனர்.

9. இராசராசன் சிவபத்தன் என்பதை முன்னரே படித்தோம். இவன் தன் தலைநகராகிய தஞ்சாவூரில் மிகப்பெரிய அளவில் **இராசராசேச்சுரம்** என்னும் பெயருடன் சிவன் கோவில் ஒன்றைக் கட்டினன். தமிழ் நாட்டில் இன்றளவும் இருநூறு அடி உயர விமானமுடைய கோவில் இது ஒன்றேயாகும். 750 அடி நீளமும் 250 அடி அகலமும் கொண்ட இடத்தில் இக்கோவில் எழுப்பப்பட்டுள்ளது. **தஞ்சைப் பெரியகோவில்** என்னும் பெயரால் இக்கோவில் இன்றளவும் விளங்குகிறது. இவன் பிற சமயங்களின்மீது வெறுப்புக் காட்டவில்லை. மைசூரில் வைணவக் கோவில்களை எடுப்பித்தான் ; நாகப்பட்டினத்தில் எடுப்பிக்கப்பட்ட '**சூடாமணி விகாரம்**' என்னும் புத்தர் கோவி–

னுக்கு **'ஆனை மங்கலம்'** என்னும் சிற்றூரைத் தேவதானமாக அளித்தான்.

10. **அப்பர், திருஞானசம்பந்தர், சுந்தரர்** என்னும் மெய்யடியார்கள் பாடிய திருப்பதிகங்களைத் தொகுத்து முறைப்படுத்திய திருப்பணி இராசராசனுடையதே ஆகும். இவனுக்கு ஒரு நூற்றாண்டுக்கு முன்னர்ப் பாடப்பட்ட **தேவாரத் திருப்பதிகங்களை**, இவன் காலத்தில் ஒரு சிலர் வாய் மொழியாகவே கேட்க முடிந்தது. அவை அனைத்தும் தில்லைத் திருக்கோவிலில் இருந்தன என்பதை அறிந்த இராசராசன், **திருநாரையூர் நம்பியாண்டார் நம்பியின்** உதவியால், அவற்றை வெளிப் படுத்தினான்.

11. இராசராசன் ஆட்சியில், இசைக் கலை, நடனக் கலை, நாடகக் கலை, கட்டடக் கலை, ஓவியக் கலை, சிற்பக் கலை முதலியவையும் வளர்ச்சி பெற்றன.

**அருஞ்சொற்பொருள் :**

அருள்—கருணை, கொடை—ஈகை, ஆட்சித்திறம்-இராச்சியம் ஆளும் திறமை, தரித்தவன்—பூண்டவன், நாட்டம்—நோக்கம், படை—சேனை, அவா-ஆவல், இறுதியில்—கடைசியில், பணிய—வணங்க, அடிப்படுத்தினான்—கீழ்ப்படுத்தினான், நிறுவினான்—நாட்டினான், புறம்காட்டி—முதுகுகாட்டி, எடுப்பித்தான்—கட்டு வித்தான், வெற்றி—ஜயம், மெய்யடியார்—உண்மைப் பத்தர், பதிகம் – பத்துச் செய்யுளால் முற்றுப்பெறும் பகுதி, தில்லை—சிதம்பரம்.

**பயிற்சி :**

1. **விடை எழுது :—**

அ. இராசராசன் யார் ?

ஆ. இராசராசன் செய்த போர்கள் யாவை ?

இ. இராசராசனுக்கு வழங்கிய பட்டப் பெயர்கள் யாவை?

ஈ. இராசராசேச்சுரத்தைப் பற்றிச் சிறு குறிப்பு எழுது.

உ. இராசராசன் செய்த சமயத்தொண்டு யாது?

ஊ. இராசராசனது ஆட்சி முறையை விவரி.

**2. கீழ்வரும் வாக்கியங்கள் ஒவ்வொன்றையும் இரண்டிரண்டாகப் பிரித்து எழுது :—**

அ. அவற்றை ஆண்ட அரசர்கள் சேர சோழ பாண்டியர் எனவும், முடியுடை மூவேந்தர் எனவும் வழங்கப் பட்டனர்.

ஆ. சோழர்களுள் ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகட்கு முன்னிருந்த கரிகாலன் தமிழ் நாட்டின் முப்பெரும் பிரிவுகளையும் ஒருங்கே ஆண்ட பேரரசன்.

**3. கோட்டைத் தகுந்த சொல்லால் நிரப்பு :—**

அ. இராசராசன் சேரநாட்டையும் பாண்டி நாட்டையும் ——— வென்றான். (அடித்து, மடக்கி, தாக்கி)

ஆ. இராசராசன் மகேந்திர மலையின்மீது வெற்றித்தூண் ———. (செய்தான், நாட்டினான், ஸ்தாபித்தான்)

இ. சிங்கள மன்னன் ——— விளைத்தான். (போர், வேண்டுகோள், கலகம்)

ஈ. இராசராசன் ஆட்சியிலும் ——— உள்ளவன். (பெருமை, திறமை, வெற்றி)

**4. இவற்றை அமைத்து வாக்கியங்கள் எழுது :—**

பெரும்பகுதி, பயிற்சி, நீடித்தது, வென்றான், விரும்பினான், தலைநகர், இவ்வண்ணம், ஆண்மை.

# 27. கதைப் படம்

குறிப்பு :—படத்தைப் பார்த்துக் கதையைச் சொல்லச் செய்தல் :



## 28. பள்ளி நூல் நிலையம்

'தொட்டனைத் தூறும் மணற்கேணி; மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு.'

என்பது தமிழ் மறைமொழி ஆகும். 'மணற்கேணியைத் தோண்டத் தோண்ட நீர் சுரப்பது போல, மக்கள் படித்தற்குரிய நூல்கள் பலவற்றைப் படிக்கப் படிக்க அறிவு பெருகும்,' என்பது இதன் கருத்து. செல்வம் சிறக்கப் பெற்றிருந்தாலும், கல்லா ஒருவன் நல்ல புகழ் எய்துவதில்லை. இதனுல், கல்வி அறிவு இன்றியமையாதது என்பது தெள்ளிதிற்புலனுகின்றது.

"அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்:
புறங்கடை நல்லிசையும் நாட்டும்;—உறுங்கவல்ஒன்(று)
உற்றுழியும் கைகொடுக்கும்; கல்வியின் ஊங்கில்லைச்
சிற்றுயிர்க்(கு) உற்ற துணே."

எனக் குமரகுருபரர் கல்வியின் பயனை நன்கு விளக்கியுள்ளார்.

2. பிள்ளைகள் தங்கள் கல்வி அறிவைப் பெருக்கிக்கொள்ளத் தங்களுக்கு விருப்பமான கலைகளைக் குறித்துக் கூறும் நூல்களைத் தனித்தெடுத்துப் படித்தல் வேண்டும். அவ்வாறு நூல்கள் பலவற்றைக் கற்றுலன்றி, ஒரு குறிப்பிட்ட பாடம் பற்றிய விளக்கமான அறிவு பெறுவதற்கு இயலாது. பள்ளிக்கூடத்தில் கற்பிக்கப்படும் நூலறிவைக் கொண்டு, மேலும் அறிவைப் பெருக்கப் பிற நூல்களைப்படிக்கும்பழக்கம் மாணவருக்கு உண்டாதல் வேண்டும். இதைக் கருதியே பள்ளியில் நூல் நிலையங்களை அமைத்திருக்கின்றனர்.

3. பள்ளி நூல் நிலையத்தில் மாணவ மாணவியர் அறிவு நிலைக்கு ஏற்றவாறு பல நூல்கள் இருக்கும். பள்ளிக்கூடங்களில் அவற்றை மாணவர்க்குக் கொடுத்துப் படிக்கச் செய்கின்றனர். இதன் பயனாக, மாணவர் எவ்வகைச் செலவுமின்றி, தங்கள் அறிவை வளர்த்துக்கொள்ள முடிகிறது. அவர்கள் விரும்பும் நல்ல நூல்களை எல்லாம் வாங்கிப் படிக்க முடிகிறது; **கம்பர், திருவள்ளுவர், புகழேந்தியார், ஒட்டக்கூத்தர், ஔவையார்** போன்ற பெரும் புலவர்களுடன் அளவளாவ முடிகிறது. அதாவது, அவர்களுடைய நூல்களில் காணப்படும் நயங்களைப் படித்து மகிழ்ந்து அவர்கள் சிறப்பை அறிய முடிகிறது. இவ்வாறே வரலாற்றுப் பேராசிரியர்கள், விஞ்ஞானப் பேராசிரியர்கள், ஆங்கில இலக்கிய ஆசிரியர்கள் முதலியவர்களின் நூல்களையும் படித்துப் பல உண்மைகளை அறிய முடிகிறது.

4. பள்ளிக்கூட நூல் நிலையங்களில் கைத்தொழில், வாணிகம், இலக்கியம், அரசியல், விஞ்ஞானம், கணிதம் ஆகியவற்றில் சிறந்த அறிஞர் பலரால் எழுதப்பட்ட நூல்கள் பல வகைப்பட்டிருக்கும். அவைகளை யெல்லாம் மாணவர் அவ்வப்போது வாங்கிப்படித்தால், அவர்கள் அறிவு வளரும்.

5. பள்ளிக்கூட நூல் நிலையங்களில் மாணவர் நூல்களைப் பெறுவது எளிது. நூல் நிலைய அதிகாரியிடம், ஒரு நாள் முன்னதாக ஒரு துண்டுக் கடிதத்தில் தம் பெயரையும், தமக்கு வேண்டும் நூலின் பெயரையும், பதிவு எண்ணையும் எழுதிக் கொடுத்து-

விட்டால், அவருக்கு உடனே அந்நூல் கிடைத்து-விடும்.

6. இவ்வண்ணம், பள்ளி நூல் நிலையங்களில் நூல்களை வாங்கிப் படித்து அறிவைப் பெருக்கும் மாணவர்கள், வாழ்வில் உயர்ந்த நிலையை அடை-வார்கள். மாணவரை எல்லாத் துறையிலும் வளர்ச்சிபெறச் செய்வது இத்தகைய நூல் நிலையங்-களேயாகும். இவை, மாணவர் அறிவைப் பெருக்கு-வதன் மூலம், நாட்டில் அறிஞர் பலர் தோன்ற உதவி செய்கின்றன.

**அருஞ்சொற்பொருள் :**

கேணி–கிணறு, மாந்தர்-மக்கள், ஊறும்–சுரக்கும், பெருகும்–அதிகரிக்கும், தெள்ளிதில்–தெளிவாக, கருதி-எண்ணி, நூல்நிலையம்–புத்தகாலயம், பிற–வேறு, அளவளாவ–உரையாட, வரலாறு–சரித்திரம், புலனாகிறது–வெளிப்படுகிறது.

**பயிற்சி :**

**1. விடை எழுது :—**

அ. பள்ளிகளில் நூல் நிலையங்கள் ஏன் இருக்கவேண்டும்?

ஆ. பள்ளி நூல் நிலையங்களில் எத்தகைய நூல்கள் காணப்படும்?

இ. பள்ளி நூல் நிலையங்களால் உண்டாகும் நன்மைகள் யாவை?

**2. இவற்றை அமைத்து வாக்கியங்கள் எழுது :—**

தமிழ்மறை, புகழ், புலனாகின்றது, அறிவு, மகிழ்ச்சி, எளிது, அதிகாரி, விருப்பமான.

**இலக்கணம் :**

**செயப்படுபொருள் குன்றிய வினை–செயப்படுபொருள் குன்றாவினை**

**இவற்றைப் படி :—**

1. இராமன் வந்தான்.
2. இராமன் பழம் வாங்கினான்.

இவை இரண்டும் வாக்கியங்கள். ஒவ்வொரு வாக்கியமும் ஒரு பொருளைப் பற்றிக் கூறுகின்றது. முதல் வாக்கியம் எழுவதற்குக் காரணமாக இருப்பது 'இராமன்' என்னும் சொல். இது வாக்கியத்தின் **எழுவாய்** எனப்படும். எழுவாய் நிகழ்த்துவதை (செய்வதை) அல்லது எழுவாய்க்கு நிகழ்வதைத் தெரிவிக்கும் சொல் **பயனிலை** எனப்படும். அதாவது வாக்கியத்தின் பயன் நிலைபெறும் சொல் என்பது பொருள். முதல் வாக்கியத்தில் இராமன் என்ன செய்தான்? வந்தான். இது பயனிலையாயிற்று.

இரண்டாம் வாக்கியத்தில் எழுவாய் இராமன்; பயனிலை வாங்கினான். இவை இரண்டும் தவிர பழம் என்னும் சொல்லும் இருக்கிறது. இது **செயப்படுபொருள்** எனப்படும். பயனிலைக்கு முன் 'எதை?' அல்லது 'யாரை?' என்னும் சொல்லை அமைத்துக் கேள்வி கேட்டால் செயப்படுபொருளை அறியலாம். இரண்டாம் வாக்கியத்தில் உள்ள 'வாங்கினான்' என்னும் பயனிலைக்கு முன் 'எதை?' என்னும் வினாவைச் சேர்த்து, 'எதை வாங்கினான்?' என்று கேட்டால் 'பழத்தை' என்னும் விடை கிடைக்கும்.

**மனப்பாடம் செய் :**

**செயப்படுபொருள் உள்ள வினைக்குச் செயப்படுபொருள் குன்றா வினை என்பது பெயர். செயப்படுபொருள் இல்லா வினைக்குச் செயப்படுபொருள் குன்றிய வினை என்பது பெயர்.**

## 29. நூல் நிலையமும் படிப்பகமும்

தமிழர்க்குத் தமிழ்மொழியிற் சுவடிச் சாலை
சர்வகலா சாலையைப்போல் எங்கும் வேண்டும் ;
தமிழில்இலாப் பிறமொழிநூல் அனைத்தும் நல்ல
தமிழாக்கி வாசிக்கத் தருதல் வேண்டும் ;
அமுதம்போல் செந்தமிழிற் கவிதை நூல்கள்,
அழகியவாம் உரைநடையில் அமைந்த நூல்கள்
சுமைசுமையாய்ச் சேகரித்துப் பல்க லைசேர்
துறைதுறையாய்ப் பிரித்தடுக்கி வைத்தல் வேண்டும். 1.

நாலைந்து தெருக்களுக்கு ஒன்று வீதம்
நல்லதுவாய் வசதியாய் இல்லம் வேண்டும் ;
நூலெல்லாம் முறையாக ஆங்க மைத்து
நொடிக்குநொடி ஆசிரியர் உதவு கின்ற
கோலமுறும் செய்தித்தாள் அனைத்தும் ஆங்கே
குவிந்திருக்க வகைசெய்து தருதல் வேண்டும் ;
மூலையிலோர் சிறுநூலும் புதுநூ லாயின்
முடிதனிலே சுமந்துவந்து தருதல் வேண்டும். 2.

—பாரதிதாசன்

**குறிப்புரை :**

1. சுவடிச்சாலை - புத்தகசாலை, சர்வகலாசாலை - பல்கலைக் கழகம், பிறமொழி-வேறு பாஷை, கவிதை நூல்-செய்யுள் நூல், உரை நடை—வசனம், சுமைசுமையாய்—மிகுதியாய், சேகரித்து—திரட்டி, துறை-பிரிவு.

2. இல்லம்-வீடு, நொடிக்கு நொடி—அடிக்கடி, கோல முறும்—அழகுபெறும், முடிதனிலே—தலையிலே.



வீரமா முனிவர்



போப்பையர்

# 30. தமிழுக்குத் தொண்டாற்றிய கிறிஸ்தவர் இருவர்

1. மதுரையிலிருந்து தமிழை வளர்த்த கடைச் சங்கம் ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் இருந்ததென்பது அறிஞர் கருத்து. அக்காலந் தொட்டு இக்காலம் வரை தமிழ் நாட்டில் வாழ்ந்து வந்த எல்லா மதத்தினரும் தமிழைக் கற்றுத் தமிழுக்குத் தொண்டாற்றிவந்துள்ளனர். சைவரும், வைணவரும், சமணரும், பௌத்தரும், கிறிஸ்தவரும், இஸ்லாமியரும் இத்தொண்டை மேற்கொண்டுள்ளனர். அவருள் **வீரமாமுனிவர், போப்பையர்** என்ற கிறிஸ்தவப் போதகர் இருவரைப் பற்றி இப்பாடத்தால் அறியலாம் :

2. ஏறத்தாழ இருநூற்றைம்பது ஆண்டுகட்கு முன் இத்தாலி நாட்டில் தோன்றியவர் வீரமாமுனிவர். அவரது இயற்பெயர் **பெஸ்கி** என்பது. அவர் ஏசுநாதர் சங்கத்தைச் சேர்ந்தவர். அவர் கிறிஸ்து

மதத்தைப் பரப்புவதற்காக இந்தியாவுக்கு வந்தார். தமிழ்நாட்டை அடைந்த அவர் கிறிஸ்துமதப் பிர- சாரம் செய்வதற்காகத் தமிழ்மொழியைக் கற்கத் தொடங்கினர். அக்காலத்தில் சிறந்து விளங்கிய தமிழ்ப் புலவர்களுள் ஒருவரான **சுப்ரதீபக் கவி- ராயர்**பால் தமிழ் இலக்கண இலக்கியங்களை நன்கு பயின்றார்.

3. கம்பராமாயணம், சிந்தாமணி, திருக்குறள் என்னும் நூல்கள் வீரமாமுனிவரின் மனத்தைப் பெரிதும் கவர்ந்தன. ஆதலால், அவர் தமது மத சம்பந்தமான சிறந்த காவியமொன்று இயற்ற ஆவல் கொண்டார். அதன் பயனாகத் **தேம்பாவணி** என்னும் காவியம் எழுந்தது. அது கிறிஸ்து மகா- னின் வாழ்க்கையை விவரிக்கிறது. அது சொல் நயத்திலும், பொருள்நயத்திலும் சிறந்து விளங்கு- கிறது. தேம்பாவணியின் சில பகுதிகளில் கம்பரது கவிநயம் காணப்படுகின்றது.

4. வீரமாமுனிவர் திருக்குறளிற் பெரிதும் ஈடுபாடு உடையவர். திருக்குறளில் காணப்படும் சிறந்த நீதிகள் அவர் மனத்தைக் கொள்ளைகொண்- டன. மதகுருவாக விளங்கிய அவர் தம்நாட்டு மக்கள் அச்சிறந்த கருத்துக்களைப் படித்துப் பயன்பெற வேண்டுமென ஆவல்கொண்டார். ஆதலால், திருக்குறளின் அறத்துப்பாலையும், பொருட்பாலையும் லத்தீன் மொழியில் பெயர்த்- தெழுதினர்.

5. இக்காலத்தில் தமிழ்ச்சொற்களின் பொரு- ளைத் தெரிந்துகொள்வதற்குப் பல அகராதிகள் இருக்கின்றன. வீரமாமுனிவர் காலத்தில் அகராதி

என்பதே இல்லை. இந்தக் குறையை நீக்கிவைத்த-வர் வீரமாமுனிவரே. இவர் பண்டைய நிகண்டு-களில் அமைந்த சொற்களை வரிசைப்படுத்தி அவற்-றிற்குப் பொருள் எழுதிச் **சதுர் அகராதி** என்னும் தமிழ் அகராதியை வெளியிட்டார். அதுவே தமி-ழில் வெளியிடப் பெற்ற முதல் அகராதியாகும். இதுவே வீரமாமுனிவர் தமிழுக்குச் செய்த தொண்டுகளுள் மிகவும் சிறந்ததாகும்.

6. வீரமாமுனிவர் தமிழுக்குப் புரிந்த மற்-ெறாரு தொண்டும் போற்றத்தக்கது. முனிவர் காலத்தில் தமிழில் உரைநடை நூல்கள் இல்லை. அவர் பல அரிய உரைநடை நூல்கள் இயற்றினார். அவற்றுள் **வேதியர் ஒழுக்கம், பரமார்த்த குரு கதை** என்னும் இரண்டும் சாலச் சிறந்தவை. வீரமாமுனிவர் தமது இலக்கணப் புலமையை வெளிப்படுத்தக் கருதித் **தொன்னூல் விளக்கம்** என்னும் ஒரு செந்தமிழ் இலக்கணத்தையும் எழுதி வெளியிட்டார்.

7. இவ்வாறு அகராதி தொகுத்தும், உரை நடை நல்கியும், இலக்கணம் எழுதியும் தமிழுக்குத் தொண்டாற்றிய முனிவர் தமது அறுபதாம் வய-தில் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

8. வீரமாமுனிவரைப் போலத் தமிழுக்குத் தொண்டு புரிந்தவர் போப்பையர். அவர் 1820-ஆம் ஆண்டில் நோவாஸ்கோஷியாவில் உள்ள **பிரின்ஸ் எட்வர்ட்** தீவில் பிறந்தார். **ஜியார்ஜ் யுக்ளோ போப்** என்பது அவரது முழுப்பெயர் அவர் கிறிஸ்து மத போதகராக இந்தியாவுக்கு வந்து, திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள **சாயர்**

புரத்தை அடைந்தார். இரண்டாண்டுகள் அங்கு இருந்து தொண்டாற்றிய பிறகு தஞ்சாவூர், உதகமண்டலம், பங்களூர் முதலிய இடங்களில் சிற்சில ஆண்டுகள் தங்கியிருந்து தமது கடமையைச் செய்து வந்தார்.

9. தமிழ் இலக்கியங்களின் பெருமையை ஆங்கிலேயர் அறியும்படி செய்தவர் போப்பையரே. அவர், தமிழை ஐயமறக் கற்றுத்தெளிந்தார். தமிழ் நூல்களில் காணப்படும் சிறந்த பொருள்களை ஆங்கிலேயர் அறியும்படி செய்ய வேண்டுமென்ற ஆவல் அவருக்கு ஏற்பட்டது.

10. போப்பையர் **திருக்குறள், நாலடியார்** என்னும் நீதி நூல்களையும், **திருவாசகம்** என்னும் சமய நூலையும் ஆங்கிலத்திற் பெயர்த்தெழுதினார். அன்றியும், அவர் பள்ளி மாணவர்களுக்கென இரண்டு **சிற்றிலக்கண நூல்களையும் தனிச் செய்யுட் கலம்பகம்** என்னும் தொகுப்பு நூலையும் வெளியிட்டார்; **நன்னூல்** என்னும் இலக்கண நூலையும் வெளியிட்டார். அன்றியும், அவர் தமிழுக்கு ஆங்கிலப் பொருளும், ஆங்கிலத்துக்குத் தமிழ்ப் பொருளும் அமைந்த **அகராதி**யையும் வெளியிட்டார்.

11. இவ்வாறு தமது பத்தொன்பதாம் வயதில் இந்தியாவுக்கு வந்த போப்பையர் தமது எண்பத்து ஆறும் வயது வரையில் தமிழுக்குத் தொண்டாற்றி மனம் களித்தார். அவர் தமக்கு அமைக்கும் கல்லறையின்மீது தமது பெயரின் கீழ்த் **'தமிழ் மாணவன்'** என்னும் தொடர் பொறிக்கப்பட வேண்டும் என்று தெரிவித்திருந்தார். அவர் விருப்பம் நிறைவேற்றப்பட்டது. இது ஒன்றே

அயல் நாட்டவரும், அயல் மொழியினருமான போப்பையர் தமிழ் மொழியின் மீது கொண்டிருந்த பற்றுக்குத் தக்க சான்ருகும்.

### அருஞ்சொற்பொருள் ;

அறிஞர்-கற்றறிந்தவர், அக்காலம் தொட்டு—அக்காலம் முதல், சைவர்—சிவபெருமானை வணங்குபவர், வைணவர்—திருமாலை வணங்குபவர், தொண்டாற்றி—பணிசெய்து, தோன்றியவர்-பிறந்தவர், இயற்பெயர்—தாய் தந்தையரால் இடப்பட்ட பெயர், சங்கம்—கழகம், பயின்ருர்-கற்ருர், கவர்ந்தன-இழுத்தன, காவியம்-பெரிய நூல், நயம்-இனிமை, பொருள்-அருத்தம், போற்றத் தக்கது—புகழத் தக்கது, மதபோதகர்-மதப்பிரசாரம் செய்பவர், களித்தார்-மகிழ்ந்தார்.

### பயிற்சி :

1. விடை எழுது :—

அ. வீரமாமுனிவர் எந்நாட்டவர்? அவர் இயற்பெயர் யாது?

ஆ. வீரமாமுனிவர் யாரிடம் தமிழைப் பயின்ருர்?

இ. தேம்பாவணி என்னும் நூல் எதைப்பற்றியது?

ஈ. வீரமாமுனிவர் இயற்றிய மொழிபெயர்ப்பு நூல் எது?

உ. வீரமாமுனிவர் தமிழுக்குச் செய்த சிறந்த இரண்டு தொண்டுகள் யாவை?

2. கீழ்வரும் இரண்டிரண்டு வாக்கியங்களை ஒவ்வொரு வாக்கியமாக எழுது :—

அ. 1. மதுரையில் தமிழை வளர்த்தது கடைச் சங்கம்.
2. அது இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இருந்தது.

ஆ. 1. வீரமாமுனிவர் இத்தாலி நாட்டில் தோன்றியவர்.
2. அவரது இயற்பெயர் பெஸ்கி என்பது.

இ. 1. தேம்பாவணி கிறிஸ்து மகானின் வாழ்க்கையை விவரிக்கிறது.
2. அதை இயற்றியவர் வீரமாமுனிவர்.

ஈ. 1. திருக்குறள் சிறந்த நீதிகளை உடையது.
2. அது வீரமாமுனிவர் மனத்தைக் கவர்ந்தது.

## இலக்கணம்:

## செய்வினை—செயப்பாட்டுவினை

**இவற்றைப் படி :—**

1. கோபாலன் இராமனை **அடித்தான்**.
2. இராமன் கோபாலனால் **அடிக்கப்பட்டான்.**

இரண்டு வாக்கியங்களையும் கவனி. இரண்டிலும் அடித்தவன் கோபாலன்; அடிபட்டவன் இராமன். ஆகவே இரண்டு வாக்கியங்களும் கூறும் விஷயம் ஒன்றே. ஆனால் வினைகள் வேறுபடுகின்றன. முதல் வினையில் '**படு**' என்பது இல்லை. அது '**செய்தான்**' என்பதுபோல இருக்கிறது. இம்மாதிரி வினை **செய்வினை** எனப்படும். இரண்டாம் வினையில் படு என்பது சேர்ந்து, '**செய்யப்பட்டான்**' என்பதுபோல இருக்கிறது. ஆதலால் இம்மாதிரி வினை **செயப்பாட்டுவினை** எனப்படும்.





## 31. செவ்விந்தியர்

1. நாம் வசிக்கும் பூமி உருண்டை வடிவமானது. அதன்மீது மிகப் பெரிய நிலப்பிரிவுகளும், நீர்ப்பிரிவுகளும் உள்ளன. நிலப்பிரிவுகள் கண்டங்களென்றும், நீர்ப்பிரிவுகள் சமுத்திரங்களென்றும் வழங்கப்பெறுகின்றன. **யூரேஷ்யா, ஆப்பிரிக்கா, வடவமெரிக்கா, தென்னமெரிக்கா, ஆஸ்திரேலியா, அண்டார்டிகா** என்பவை கண்டங்களின் பெயர்கள். கண்டங்களுள் அமெரிக்காக் கண்டங்கள் இரண்டும் சமீபகாலத்தில் கண்டறியப்பட்டவை. ஆதலால், அவற்றிற்குப் **'புதிய உலகம்'** என்னும் பெயர் வழங்கிவருகிறது. அண்டார்டிகாவும் சமீபகாலத்தில் கண்டறியப்பட்டதே.

2. பண்டைக்காலம் முதல் ஐரோப்பியர் இந்தியரோடு வாணிகம் நடத்திவந்தனர். சுமார் நானூறு ஆண்டுகளுக்கு முன் ஐரோப்பாவுக்குக் கிழக்கில் உள்ள நாடுகள் முஸ்லிம்கள் வசமாயின. முஸ்லிம்கள் தங்களுக்குப் பகைவராயிருந்த ஐரோப்பியர் இந்தியாவுடன் வாணிகம் நடத்தவொட்டாமல்

இடையூறு செய்யத் தொடங்கினர். ஆதலால், ஐரோப்பியர் இந்தியாவுக்கு ஒரு கடல் வழியைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் இறங்கினர்.

3. இந்தியாவுக்குக் கடல் வழியைக் கண்டு பிடிக்க முயன்றவர்களுள் **கொலம்பஸ்** என்பவரும் ஒருவர். அவர் இத்தாலி நாட்டைச் சேர்ந்தவர். போர்த்துகல் நாட்டு அரசியார் அவர் முயற்சிக்குத் துணைபுரிந்தார். கொலம்பஸ் 1492-ஆம் ஆண்டில் மூன்று மரக்கலங்களுடன் புறப்பட்டார். உருண்டை வடிவமுடைய பூமியின்மீது ஐரோப்பாவிலிருந்து மேற்கு நோக்கிப் பிரயாணம் செய்தால், இந்தியாவை அடைந்துவிடலாம் என்பது அவரது திடமான நம்பிக்கை. ஆதலால் அவர் தம்முடைய மரக்கலங்களை மேற்கு நோக்கியே செலுத்திப் பல நாட்களுக்குப் பிறகு ஒரு நாட்டை அடைந்தார்; அதுவே இந்தியா என்று நிச்சயித்தார்; அங்கு வாழ்ந்திருந்த மக்கள் சிறிது செம்மை நிறமுள்ளவர்களாக இருந்தார்கள். ஆதலால் அவர்களைச் **செவ்விந்தியர்** என்று வழங்கினர்.

4. கொலம்பஸ் கண்டறிந்தது இந்தியாவன்று; அக்காலம் வரை எவரும் அறிந்திராத ஒரு புதிய கண்டத்தின் கிழக்கில் உள்ள தீவுகளுள் ஒன்று. அத்தீவுகளே இக்காலத்தில் மேற்கிந்தியத் தீவுகள் என்று குறிக்கப்படுகின்றன. அப்புதிய கண்டமே அமெரிக்காக் கண்டம் என வழங்கப்படுவது. இக் கண்டத்தின் உட்பகுதிகளைக் கண்டறிந்தவர் **அமெரிகோ வெஸ்புகி** என்பவர். அவர் பெயரே அதற்கு வழங்கலாயிற்று. அமெரிக்காவின் பூர்வீகக் குடிகள் செவ்விந்தியர் என்றே வழங்கப்பட்டார்கள்.

5. செவ்விந்தியர் அமெரிக்காவில் பல இடங்களில் வசித்துவந்தனர். அவர்கள் நீண்ட தலைமயிரும், கருமையான விழிகளும் உடையவர்கள்; சிவந்த நிறமுள்ளவர்கள். அவர்கள் கூட்டம் கூட்டமாக வாழ்ந்து வந்தார்கள். வேட்டையாடுவதும், பயிரிடுவதும் அவர்களுடைய முக்கியத் தொழில்கள்.

6. செவ்விந்தியர் விலங்குகளின் தோல்களால் தைக்கப்பட்ட உடைகளை அணிந்துகொள்வர். பல வண்ண மணிகளாலும், கிளிஞ்சல்களாலும், பறவைகளின் இறகுகளாலும் தங்களை அலங்கரித்துக் கொள்வர். தலை மயிரைப் பின்னலிட்டுத் தொங்க விட்டுக் கொள்வர். ஆண்கள் பறவைகளின் இறகுகளை மயிலின் தோகை போல அமைத்துத் தலையில் அணிந்துகொள்வர்.

7. செவ்விந்தியரின் முக்கிய உணவுப் பொருள் சோளம். அவர்கள் தாங்கள் வேட்டையாடிய விலங்குகளின் இறைச்சியையும் உண்பார்கள்; காய் கனி கிழங்குகளையும் தின்பார்கள். அவர்கள் சோழிகளையும், மணிகளையும் நாணயங்களாக உபயோகித்தார்கள்.

8. செவ்விந்தியர் கோடை காலத்தில் கூடாரங்களில் வசிப்பர். அக்கூடாரங்களை விலங்குகளின் தோலாலும், மரப்பட்டைகளாலும் அமைத்துக் கொள்வர். '**விக்வாம்**' என்பது செவ்விந்தியரின் கூடாரத்துக்கு வழங்கிவரும் பெயர். குளிர்காலத்தில் மரத்துண்டுகளால் சிற்றறைகள் அமைத்து அவற்றில் அவர் வசிப்பர்.

9. செவ்விந்தியர் தங்கள் பூர்வீகத்தைப் பற்றிக் கூறிக்கொள்ளும் செய்தி விநோதமானது.

அவர்களுள் ஒரு சாரார் தங்களை விலங்கு வமிசத்த-வர் என்றும், மற்றொரு சாரார் தங்களைப் பறவை வமிசத்தவர் என்றும் கூறிக்கொள்வர். விலங்கு வமிசத்தவர் விலங்குகளின் பெயர்களையும், பறவை வமிசத்தவர் பறவைகளின் பெயர்களையும் தங்கள் பெயர்களாக வைத்துக்கொள்கின்றனர். ஆனால், ஒரு வமிசத்தவர் தம் வமிசத்தவரோடு மணத்தொடர்பு கொள்ளாமல் வேற்று வமிசத்தவ-ரோடுதான் கொள்வர். புட்களையும், விலங்குகளை-யும் தெய்வங்களாக வணங்குவது அவர்கள் வழக்கம்.

10. செவ்விந்தியர் மட்பாண்டம் செய்தல், எலும்பினால் தூண்டில்முள் செய்தல், வலை பின்னு-தல் முதலிய தொழில்களில் வல்லவர்கள். செவ்-விந்தியர் நீர்நிலைகளைக் கடப்பதற்கு உபயோகிக்கும் படகுகள் மிகவும் இலேசானவை. அவை ஒவ்-வொன்றையும் ஒரே மனிதன் தூக்கிக்கொண்டு வெகுதூரம் செல்ல இயலும். செவ்விந்தியரின் தொகை இக்காலத்தில் மிகவும் சுருங்கி வருகிறது. ஆயினும், இக்காலத்துச் செவ்விந்தியர் கல்வியிலும் நாகரிகத்திலும் முன்னேறி வருகின்றனர்.

**அருஞ்சொற்பொருள் :**

இடையூறு-தொல்லை, பகை-விரோதம், துணைபுரிந்தார்-உதவி செய்தார், மரக்கலம்-பாய்மரக் கப்பல், திடமான-உறுதி யான, உட்பகுதி-உள்பாகம், பூர்வீகக் குடிகள்-பழமையான மக்கள், வண்ணம்-நிறம், இறைச்சி-மாமிசம், வமிசம்-குலம் இயலும்-முடியும், சுருங்கி-குறைந்து.

**பயிற்சி :**

**1. விடை எழுது :—**

அ. கண்டங்கள் எத்தனை ? அவை எவை ?

ஆ. 'புதிய உலகம்' என்பது எக்கண்டங்களுக்கு வழங்கி வரும் பெயர்?

இ. அமெரிக்காவைக் கண்டுபிடித்தவர் கொலம்பஸ் என்று கூறப்படுவது சரியா? காரணம் என்ன?

ஈ. செவ்விந்தியர் தோற்றம் எவ்வாறு இருக்கும்?

உ. செவ்விந்தியரின் உணவுப் பொருள்கள் யாவை?

ஊ. அவர்கள் கோடைக்காலத்தில் எவற்றில் வசிப்பார்கள்? குளிர்காலத்தில் எவற்றில் வசிப்பார்கள்?

எ. செவ்விந்தியரைப் பற்றிய விநோதச் செய்திகளுள் இரண்டினை எழுது.

**2. கோடுகளைத் தகுந்த சொற்களால் நிரப்பு:—**

அ. ஐரோப்பியர்களுக்கும் முஸ்லிம்களுக்கும் ——— ஏற்பட்டபடியால், ஐரோப்பியர் ——— மார்க்கம் கண்டு பிடிக்க முயன்றனர். (பழைய, நட்பு, பகை, புதிய)

ஆ. மேற்கு ——— சென்றால் இந்தியாவை அடையலாம் என்பது அவரது ——— எண்ணம். (வழி, நிச்சய மான, நோக்கி, உறுதியான)

இ. கொலம்பஸ் ——— இந்தியாவன்று. (சென்றது, கண்டது)

**3. கீழ்வரும் வாக்கியங்களில் தடித்த எழுத்துக்களில் உள்ள சொற்களுக்குப் பதில் வேறு சொற்கள் எழுது:—**

அ. நாம் **வசிக்கும்** பூமி உருண்டையானது.

ஆ. பூமியின் மீது ஆறு பெரிய **நிலப்பிரிவுகள்** உள்ளன.

இ. ஐரோப்பியர் இந்தியாவுடன் **வியாபாரம்** நடத்தி-வந்தனர்.

ஈ. இந்தியாவுக்கு ஒரு **நீர் மார்க்கம்** கண்டுபிடிக்க வேண்டிய **தேவை** ஏற்பட்டது.

**4. இப்புத்தகத்தில் நீ மிகவும் விரும்பும் படம் எது? பாட்டு எது? பாடம் எது? ஒவ்வொன்றுக்கும் காரணம் கூறு.**

# செய்யுட் பாடம்

## I. நீதி

### 1. நீதி வெண்பா

சத்தியத்தை வெல்லா(து) அசத்தியந்தான் ; நீள்பொறையை
மெத்திய கோபமது வெல்லாது ;—பத்திமிகு
புண்ணியத்தைப் பாவமது வெல்லாது ; போரரக்கர்
கண்ணனைத்தான் வெல்லுவரோ ? காண். 1

குறிப்புரை :

சத்தியம்-மெய், அசத்தியம்—பொய், நீள்—மிகுதியான, பொறை-பொறுமை, மெத்திய—அதிகரித்த, போர் அரக்கர்—போர்செய்யும் இராக்கதர்.

பொன்னும், கரும்பும், புகழ்பாலும், சந்தனமும்
சின்னம் படவருத்தம் செய்தாலும்—முன்னிருந்த
நற்குணமே தோன்றும் ; நலிந்தாலும் உத்தமர்பால்
நற்குணமே தோன்றும் நயந்து. 2

குறிப்புரை :

சின்னம் பட—சிறுமையுடையும்படி, நலிந்தாலும்-மெலியச் செய்தாலும், நயந்து—பொருந்தி.

கொம்புளதற் கைந்து; குதிரைக்குப் பத்துமுழம்;
வெம்புகரிக் காயிரந்தான் வேண்டுமே;—வம்புசெறி
தீங்கினர்தங் கண்ணில் தெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி. 3

குறிப்புரை :

கொம்பு உளதற்கு-கொம்புள்ள மிருகத்திற்கு, ஐந்து—ஐந்து முழம் தொலைவு, வெம்புகரி—கோபிக்கும்யானை, வம்பு செறி-துட்டத்தனம் நிறைந்த, தீங்கினர்-தீயவர், நெறி-நீதி.

### 2. மூதுரை

நல்லாரைக் காண்பதுவும் நன்றே; நலமிக்க
நல்லார்சொற் கேட்பதுவும் நன்றே ;—நல்லார்

குணங்கள் உரைப்பதுவும் நன்றே; அவரோ(டு)
இணங்கி யிருப்பதுவும் நன்று. 1

### குறிப்புரை :

நன்றே—நல்லது, நலம் மிக்க-நற்குணம் மிகுந்த, இணங்கி—தொடர்பு கொண்டு.

கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்
அவையல்ல நல்ல மரங்கள்;—சவைநடுவே
நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய
மாட்டா தவன்நல் மரம். 2

### குறிப்புரை :

கவை-மரக்கப்பு, கொம்பு—கிளை, காட்டு அகத்தே-காட்டில், அவையல்ல—அந்த மரங்களல்ல, நீட்டு ஓலை—தன்கையிற் கொடுக்கப் பட்ட சீட்டு, வாசியா நின்றான்—படிக்கமாட்டாதவனாய் நின்றவன்.

கற்பிளவோ டொப்பர் கயவர்; கடுஞ்சினத்துப்
பொற்பிளவோ டொப்பாரும் போல்வாரே;—விற்பிடித்து
நீர்கிழிய எய்த வடுப்போல மாறுமே
சீரொழுகு சான்றோர் சினம். 3

—ஔவையார்

### குறிப்புரை :

கற்பிளவோடு—கற்பாறையின் பிளவை, ஒப்பர்—ஒத்திருப்பர், கயவர்-கீழ்மக்கள், வடு—தழும்பு அல்லது பிளவு, சீர் ஒழுகு-பெருமை நிறைந்த, சான்றோர்-அறிவுடையவர், சினம்-கோபம்.

## 3. நன்னெறி

உள்ளங் கவர்ந்தெழுந்(து) ஓங்கு சினங்காத்துக்
கொள்ளுங் குணமே குணமென்க:—வெள்ளம்
தடுத்த லரிதோ, தடங்கரைதான் பேர்த்து
விடுத்த லரிதோ? விளம்பு. 1

### குறிப்புரை :

உள்ளம்—மனம், கவர்ந்து—பற்றி, ஓங்கு-மேலெழும், சினம்—கோபம், காத்துக்கொள்ளும்—அடக்கிக் கொள்ளும், குணமென்க—றந்த குணமாகும் என அறிக, விளம்பு—கூறு.

கற்ற அறிவினரைக் காமுறுவர் மேன்மக்கள்;
மற்றையர்தாம் என்றும் மதியாரே;—வெற்றிநெடு
வேல்வேண்டும் வாள்விழியாய்! .வேண்டா புளிங்காடி
பால்வேண்டும் வாழைப் பழம். 2

### குறிப்புரை :

காமுறுவர்-விரும்புவர், மற்றையர்-மேன்மக்கள் அல்லாதார், (கீழ்மக்கள்), வெற்றி நெடு வேல் வேண்டும் வாள் விழியாய்-வெற்றியை உடைய நெடிய வேலாயுதம் விரும்புகின்ற ஒளிபொருந்திய கண்களை உடையவளே, பால்வேண்டும் வாழைப் பழம்—இனிய பாலானது வாழைப்பழத்தை வேண்டி நிற்கும், (பால் குடிப்பவர் வாழைப்பழம் உண்ண விரும்புவர்.) வேண்டா புளிங்காடி-புளிங்காடி வாழைப்பழத்தை விரும்பாது.

இல்லானுக் கன்பிங் கிடம்பொருள் ஏவல்மற்
றெல்லா மிருந்தும்அவற் கென்செய்யும் ?—நல்லாய்,
மொழியிலார்க் கேது முதுநூல்? தெரியும்
விழியிலார்க் கேது விளக்கு ? 3

—சிவப்பிரகாச சுவாமிகள்

### குறிப்புரை :

இங்கு அன்பு இல்லானுக்கு—இவ்வுலகத்தில் அன்பு இல்லாதவனுக்கு, ஏவல்—வேலையாள், அவற் கென் செய்யும்—அவனுக்கு யாது பயனைத் தரும்? நல்லாய் நற்குணமுள்ள பெண்ணே, மொழி இலார்-பேச்சில்லாத ஊமைகள், முது நூல்—பழமையான நீதி நூல், தெரியும்—பார்க்கின்ற, விழியிலார்க்கு-கண்ணில்லாத குருடர்க்கு, விளக்கு ஏது—விளக்கு என்ன பயன் தரும்?

## 4. இனியவை நாற்பது

பிச்சைபுக் காயினும் கற்றல் மிகவினிதே ;
நற்சவையில் கைகொடுத்தல் சாலவு முன்னினிதே ;
முத்தேர் முறுவலார் சொல்லினி(து); ஆங்கினிதே
தெற்றவு மேலாயார்ச் சேர்வு. 1

### குறிப்புரை :

பிச்சை புக்காயினும்-பிச்சை எடுத்தாயினும், கற்றல்—(கற்பனவற்றைக் கசடறக்) கற்றல், நற்சவையில்—நல்ல சபையிலே, கை

கொடுத்தல்—தமக்கு வந்து உதவுதல், சாலவும்-மிகவும், முன்இனிதே—முற்பட இனிது, முத்து ஏர் முறுவலார்—முத்தை ஒக்கும் பற்களை உடைய மகளிரது, ஆங்கு—அதுபோல, தெற்றவும்—தெளியவும், மேலாயார்ச் சேர்வு—பெரியாரைத் துணைக் கொள்ளுதல்.

கொல்லாமை முன்னினிது; கோல்கோடி மாராயஞ்
செய்யாமை முன்னினிது; செங்கோல னாகுதல்
எய்துந் திறத்தா லினிதென்ப; யார்மாட்டும்
பொல்லாங் குரையாமை நன்கு. 2

குறிப்புரை :

கொல்லாமை—ஓர் உயிரைக் கொல்லா திருத்தல், முன் இனிது—மிக இனிது, கோல் கோடி-(அரசன்) நடுவு நிலைமை தவறி, மாராயம் செய்யாமை-சிறப்புச் செய்யாமை, யார் மாட்டும்—யாவரிடத்திலும், எய்தும் திறத்தால்—கூடியமட்டில், பொல்லாங்கு உரையாமை—(பிறர் மீது) குற்றம் கூறாமை,

நன்றிப் பயன்றூக்கி வாழ்தல் நனியினிதே ;
மன்றம் கொடும்பா(டு) உரையாத மாண்பினிதே ;
அன்றறிவார் யாரென் றடைக்கலம் வெளவாத
நன்றியின் நன்கினிய தில். 3

—பூதஞ் சேந்தனார்.

குறிப்புரை :

நன்றிப் பயன்—(ஒருவர் செய்த) நன்றியின் பயனை, தூக்கி—ஆராய்ந்து, மன்றம்-நியாய சபை, கொடும்பாடு-பட்சபாதம், உரையாத—சொல்லாத, மாண்பு-பெருமை, அறிவார் யார் என்று—அறிவார் ஒருவரும் இலர் என்று, அடைக்கலம்—அடைக்கலப் பொருளை, வெளவாத—அபகரியாத, நன்றியின்-நன்மையினும், நன்கு இனியது—மிக இனியது, இல்—வேறொன்றும் இல்லை.

## 5. இன்னா நாற்பது

உண்ணாது வைக்கும் பெரும்பொருள் வைப்பின்னா ;
நண்ணாப் பகைவர் புணர்ச்சி நனியின்னா ;
கண்ணி லொருவன் வனப்பின்னா; ஆங்கின்னா
எண்ணிலான் செய்யுங் கணக்கு. 1

குறிப்புரை :

உண்ணாது - அனுபவியாது, வைப்பு - புதைத்து வைப்பது, இன்னா-துன்பமாம், நண்ணா- (மனம்) பொருந்தாத, புணர்ச்சி-சேர்க்கை, நனி-மிகவும், கண் இல் ஒருவன்-விழி இல்லாத ஒருவனது, வனப்பு-அழகு, ஆங்கு-அவ்வாறே, எண் இலான்-கணித நூல் பயிலாதவன், செய்யும் கணக்கு-எழுதும் கணக்கு.

நட்டார் இடுக்கண்கள் காண்டல் நனியின்னா ;
ஒட்டார் பெருமிதங் காண்டல் பெரிதின்னா ;
கட்டில்லா மூதூர் உறைவின்னா ; ஆங்கின்னா
நட்ட கவற்றினாற் சூது. 2

குறிப்புரை :

நட்டார்-நட்புக் கொண்டவரது, இடுக்கண்கள்-துன்பங்கள், காண்டல்-பார்த்தல், ஒட்டார்-பகைவரது, பெருமிதம்-செருக்கு, கட்டு இல்லா-(சுற்றமாகிய) கட்டு இல்லாத, மூதூர்-பழைய ஊர், உறைவு இன்னா-வாழ்தல் துன்பமாம், நட்ட-நடப்படும், கவறு-பாய்ச்சிகைக்காய், கவற்றினாற் சூது-பாய்ச்சிகையைக் கொண்டு ஆடப்படும் சூதாட்டம்.

கல்லாதா னூருங் கலிமாப் பரிப்(பு)இன்னா ;
வல்லாதான் சொல்லும் உரையின் பயனின்னா ;
இல்லார்வாய்ச் சொல்லி னயமின்னா ; ஆங்கின்னா
கல்லாதான் கோட்டி கொளல். 3

—கபிலர்

குறிப்புரை :

கல்லாதான்-(நடத்த வேண்டிய முறையை) அறியாதவன், ஊரும்-ஏறிச் செலுத்தும், கலிமா-செருக்குப் பொருந்திய குதிரை, பரிப்பு இன்னா-சுமந்து செல்லுதல் துன்பந்தரும், வல்லாதான்-கல்வியில் வல்லவனல்லாதவன், உரையின் பயன்-சொல்லின் பொருள், இல்லார்-செல்வம் இல்லாதவர், கோட்டிகொளல்-சபையில் பேசுதல்.

## 6. விவேக சிந்தாமணி

கற்பகத் தருவைச் சார்ந்த காகமும் அமுத முண்ணும் ;
விற்பன விவேக முள்ள வேந்தரைச் சேர்ந்தோர் வாழ்வார் ;

இப்புவி தன்னிற் கிள்ளை இலவுகாத் ததனைப் போல
அற்பரைச் சேர்ந்தோர் வாழ்வ தரிதரி தாகு மம்மா ! 1

குறிப்புரை :

கற்பகத் தரு-கற்பக மரம் (இது, தன்னை அடைந்தார் வேண்டும் பொருளைத் தரவல்லது), விற்பனம்-கல்வி, விவேகம்-அறிவு, வேந்தர்-அரசர், புவி-பூமி, கிள்ளை-கிளி, இலவு—இலவம்பழம்.

தந்தையுரை தட்டினவன், தாயுரை இகழ்ந்தோன்,
அந்தமுறு தேசிகர்தம் ஆணையை மறந்தோன்,
சந்தமுறு வேதநெறி தாண்டினவ னுல்வர்
செந்தழலின் வாயினிடை சேர்வதுமெய் கண்டீர். 2

குறிப்புரை :

அந்தம் உறு—கல்வியழகு நிரம்பிய, தேசிகர்—குரு, ஆணை-கட்டளை, சந்தம் உறு-இசை பொருந்திய, வேதநெறி-வேதங்கள் வகுத்த நீதிமுறை, தாண்டினவன்—கடந்தவன், தழல்—நெருப்புமயமான நரகம், வாயினிடை—இடத்தின்கண், சேர்வது-அடைவது.

தீங்கொணு வறுமை வந்தால், சபைதனிற் செல்ல நாணும்;
வேங்கைபோல் வீரங் குன்றும் ; விருந்தினர்க் காண நாணும் ;
பூங்கொடி மனையாட் கஞ்சும் ; புல்லருக் கிணங்கச் செய்யும் ;
ஓங்கிய அறிவு குன்றும் ; உலகெலாம் பழிக்குந் தானே. 3

—புலவர் பலர்

குறிப்புரை :

ஒணு—ஒண்ணு (முடியாத), வறுமை—தரித்திரம், நாணும்-வெட்கம் தோன்றும், குன்றும்—குறையும், பூங்கொடி-பூங்கொடிபோன்றவள், புல்லர்-அற்பர், இணங்க—அடங்கி நடக்க.

## II. சதகத் திரட்டு

### 1. கயிலாச நாதர் சதகம்

கடலுலகி லுற்றபொரு ளுக்குளே நன்மைதரு
கல்விநிலை பெற்றபொருளாம் ;
கனலினு லுருகாது ; புனலினுற் கரையாது ;
கள்ளரால் திருடொணுது ;

திடமான ராசாதி ராசரா லும்மதைத்
 தீண்டிச் சிதைக்கொணுது ;
செயன்மிக்க மாதரார் சேதமா கா(து); ஒருவர்
 செலவிடிற் குறைவுருதங்(கு)

அடமிகு சகோதரர்க் கிடமது கொடாததனை
 அளவிடவு முடியாதுகாண் !
அப்பொருளி னைப்பெரு திப்புவியி லலேகின்ற
 அற்பருறு பயனென்கொலோ !

கடகய முரித்துடலி னிற்றரித் திடுதேவ !
 கற்பக விராசமேவுங்
கங்கைபுனை யீசனே ! மங்கைமகிழ் நேசனே !
 கயிலேயங் கிரிவாசனே !

—சிதம்பரம் பிள்ளை

குறிப்புரை :

கடல் உலகில்—கடலால் சூழப்பட்ட உலகில், கனல்—நெருப்பு, புனல்—நீர், திடமான—வலிமை பொருந்திய, ராசாதிராசர்—சக்கரவர்த்திகள், சிதைக்க—அழிக்க, ஒணுது—முடியாது, செயல்மிக்க—சூழ்ச்சி மிக்க, சேதமாகாது—நாசமடையாது, அடல்மிகு—பலம்மிக்க, புவி—உலகம், உறுபயன்—அடையும் பலன், கடம்—மதம், கயம்—யானை, கற்பகம்—தேவலோகத்து மரங்களில் ஒன்று, விராசம்—ஒளி, மேவும்—பொருந்திய, (கற்பக மரத்தின்கீழ் விளங்கும் பிரகாசம் பொருந்திய கங்கை).

## 2. திருவேங்கட சதகம்

சந்திரன் இலாஇரவு, மதுரமில் லாதகவி,
 தனயரில் லாதசெல்வம்,
சற்சனர் இலாதவூர், புரவியில் லாதபடை,
 தளபதிஇல் லாதசேனை,

பைந்தொடி யிலாதமனை, பாடலில் லாவேசை,
 பத்தியில் லாதபூசை,
பார்த்திப ரிலாதபட் டணம்,யூக மந்திரிகள்
 பற்பல ரிலாதவரசு,

கந்தமில் லாதமலர், சத்யமில் லாதவாய்,
கல்வியில்லாத தேகம்,
கனவினயமில் லாநியோகி,சுசி யில்லாத
கன்மம்,உப தேசமில்லா
மந்த்ரமிவை வித்வசன மில்லாத சபைஎன்பர்
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே!
வரதவேங் கடராயனே!

—நாராயண பாரதியார்

குறிப்புரை :

மதுரம்-இனிமை, தனயர்-புதல்வர், சற்சனர்-நல்லோர், புரவி-குதிரை, தளபதி-சேனைத் தலைவன், பைந்தொடி-பசுமையான வளைய லணிந்த பெண், பார்த்திபர்-அரசர், கந்தம்-நறுமணம், அரசு-இராச்சியம், கனவினயம்-மிக்கநயம், நியோகி-அதிகாரி, சுசி—பரிசுத்தம், கன்மம்—வேலை.

## III. பல்சுவைப் பாடல்கள்

### 1. வாழ்த்து

உருவமில் இறைவன் ஒருவன் என்றே
அருளிய முகம்மது பெருநபி வாழி!
'நேசி பகைவரை,' என்று பேசி
ஆணி அறைந்த மாணிலர் இடத்தும்
இரக்கம் காட்டிப் பரக்கச் சிலுவையில்
நின்ற கிருஸ்துவின் அன்பு வாழி!
அருளறம் வளர்த்த அருகன் வாழி!
ஒருமையில் நின்று தருமம் உணர்த்திய
சத்திய ஞானப் புத்தன் வாழி!
அமரன் அழகுக் குமரன் வாழி!

—திரு. வி. க.

குறிப்புரை :

இறைவன்-கடவுள், அருளிய—கூறிய, மாண்—பெருமை, இலர்—இல்லாதவர், அருள்—கருணை, ஒருமை—ஒற்றுமை, அமரன்—தேவன்.

## 2. தமிழ்

பொருப்பிலே பிறந்து, தென்னன்
புகழிலே கிடந்து, சங்கத்(து)
இருப்பிலே யிருந்து, வைகை
ஏட்டிலே தவழ்ந்த பேதை,
நெருப்பிலே நின்று, கற்றோர்
நினைவிலே நடந்தோ ரேன
மருப்பிலே பயின்ற பாவை
மருங்கிலே வளரு கின்றாள்.

—வரந்தருவார்

குறிப்புரை :

பொருப்பு-மலை, தென்னன்-பாண்டியன், ஏட்டிலே-சமணரோடு வாதிட்டபோது திருஞானசம்பந்தர் பாக்கள் எழுதிய ஏட்டில், பேதை-பெண், நெருப்பிலே நின்று-சமணர்களோடு அனல் வாதிட்ட போது திருஞானசம்பந்தர் ஏட்டில் பாட்டெழுதித் தீயில் இட எரியாது நின்று, ஓர்ஏனமருப்பிலே பயின்ற பாவை-இரணியாக்கன் என்ற இராக்கதன் பூமியைக் கொண்டுபோய்க் கடலில் ஒளித்தபோது திருமால் ஒப்பற்ற பன்றி வடிவமாய் வந்து அப் பூமியைத் தம் கொம்பிலே தாங்க அதிற் பொருந்தியிருந்த பூமி, மருங்கு-இடுப்பு.

## 3. சங்கடம் தீர்க்கும் வழி

முன்னமோர் பொய்யுரைக்க அப்பொய்வெளி
ஆகாமல் மூடும் வண்ணம்
பின்னுமோர் பொய்யுரைக்க அதையும்நிலை
நிறுத்திடவோர் பெரும்பொய் சொல்ல
இன்னவகை கைதவம்ஒன் றிருநூறு
கைதவத்துக் கிடமாம் ; வாய்மை
தன்னையே முன்பகரில் சங்கடம்ஒன்
றிலை;அதுவே தகைமை நெஞ்சே!

—மாயூரம் வேதநாயகம் பிள்ளை

குறிப்புரை :

கைதவம்-பொய், வாய்மை—மெய், பகரில்—கூறினல், தகைமை-பெருமை.

## 4. கொடியவை

கொடியது கேட்கின் நெடியவெவ் வேலோய்!
கொடிது கொடிது வறுமை கொடிது;
அதனினுங் கொடிதே இளமையில் வறுமை;
அதனினுங் கொடிதே ஆற்ருெணுக் கொடுநோய்;
அதனினுங் கொடிதே அன்பிலாப் பெண்டிர்;
அதனினுங் கொடிதே
இன்புற அவர்கையில் உண்பது தானே.

குறிப்புரை:

நெடிய—நீண்ட, வெவ்வேல்—கொடிய வேல், வறுமை—தரித்திரம், ஆற்ருெணு-தாங்க ஒண்ணுத.

## 5. இனியவை

இனியது கேட்கில் தனிநெடு வேலோய்!
இனிதினிது என்றும் ஏகாந்தம் இனிதே;
அதனினும் இனிதே அறிவினர்ச் சேர்தல்;
அதனினும் இனிதே அறிவுள் ளோரைக்
கனவினும் நனவினுங் காண்பது தானே.

—ஔவையார்

குறிப்புரை:

தனி—ஒப்பற்ற, ஏகாந்தம்—தனிமை.

## 6. கடல்

எல்லை அறியாப் பெருங்கடலே!—நீதான்
இரவும் உறங்கா யோகடலே!
அல்லும் பகலும் அலைகடலே!—உனக்(கு)
அலுப்பும் இலையோ கருங்கடலே!

உருண்டு திரண்டு வரும்கடலே,—உடைந்(து)
ஓடிப் போவ தேன்கடலே!
வெருண்டு மதிகெட் டாய்கடலே!—பாறை
விலகிப் போகு மோகடலே!

மழைக்கு மூலமும் நீகடலே! —அதை
வாங்கி வைப்பதும் நீகடலே!
வழுத்து மகிமையெ லாம்கடலே!—எவர்
மதித்து முடிக்கவ லார்கடலே!

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

**குறிப்புரை :**

வெருண்டு—பயந்து, மதி—அறிவு, மூலம்—காரணம், வழுத்தும்—பேசும், மதித்து முடிக்க வல்லார்—மதிப்பிட்டுக் கூறவல்லவர்.

## 7. கூட்டுறவு

கூட்டுறவால் நாமே குறையனைத்தும் போக்கிடலாம் ;
நாட்டுறவும் கொள்ள நலமாகும் ;—வாட்டமுறும்
ஏழை நலங்காண்பான் எந்நாளும் இன்பமுண்டாம்
கோழை யறிவுறுவான் கூறு.

**குறிப்புரை :**

நாட்டுறவு-நாட்டு மக்களுடன் தொடர்பு. நலமாகும்—நன்மை பயக்கும், வாட்டமுறும்—துன்பமடையும், கோழை—பயங்கொள்ளி.

## 8. ஏற்புடைப் பானம்

காப்பியொடு தேநீர் கருதுகின்ற நாகரிகம்
நீப்பரிய தாகி நிலைத்திடுமோ ?—யாப்புயர்ந்த
சுக்குடனே ஆவிரம்பூ சொல்லுதனி யாமிளகு
பக்குவநீர் நீபருகப் பார்.

வித்துவான் சி. இரத்தினவேலன்

**குறிப்புரை :**

நீப்பரியதாகி—நீக்குதற்கு முடியாததாகி, யாப்புயர்ந்த-உறுதியா லுயர்வடைந்த, ஆவிரம்பூ—ஆவாரம்பூ.

## 9. கொடி வணக்கம்

அலகிலா அகிலம் அகமகிழ் வடைய
அலைகடல் உதிக்குஞா யிறுபோல்
உலகெலா மதிக்கும் உத்தமன் காந்தி
ஒப்புமை யற்றநல் லறப்போர்

நலமுறத் தொடுக்க, நம்மனை நாடு
நவிலரு விடுதலை எய்தப்
பலமதை அளித்த மூந்நிற மார்ந்த
பழுதிலாக் கொடியினைத் துதிப்பாம்! 1

செம்மைசால் தியாகம் செய்தஉத் தமர்கள்
சிந்திய குருதியின் குறியாய்
மும்மைசால் உலகம் முழுமையும் வியக்க
முந்நிற மவற்றினுள் முதலாய்க்
கண்ணினைக் கவரும் காட்சிய தாகக்
கதித்தகே சரிநிறம் தோன்ற
விண்ணினை வருடி விளங்கிடு கொடியை
விருப்புடன் அஞ்சலி புரிவாம்! 2

தூயவெண் ணிறமச் செந்நிற மதன்கீழ்த்
துலங்குற அமைந்துநல் உலகில்
நேயமோ டமைதி நிரந்தரம் பொலிந்து
நிலவிட விழைந்திடல் காட்டித்
தாயக மதற்குத் தனிச்சிறப் பளிக்கும்
தன்னிக ரற்றநம் கொடியைச்
சேயது தாயைப் போற்றலே போன்று
தினந்தினந் தொழுதும்ஏத் திடுவாம்! 3

ஓகைசேர் தோகை ஆகமே போல
ஒளிர்தரு பச்சைநல் வண்ணம்
ஈகைசேர் இந்தி யாவெனு நாடு
இயற்கையாம் வளங்களே யன்றி
வாகைசேர் மேழிச் செல்வமும் படைத்து
வயங்கிடு மியல்பினைக் காட்ட
ஏகையா ளன்ன அன்னையின் கொடியில்
இயைந்துள தறிந்துபோற் றிடுவாம்! 4

சத்தியம் தருமம் தகைவிலா நீதி
தரணியில் நிலைபெறச் செய்தல்
நித்தியக் கடமை என்பதை உளத்தில்
நிலைபெறச் செய்திடற் காக

உத்தமன் அசோக சக்கர வர்த்தி
உயர்த்திய தருமசக் கரத்தை
இத்தரை மக்கள் ஏத்திடத் தாங்கும்
எழிற்கொடி தனைவணங் கிடுவாம்! 5

—த. சே. உமாபதி

குறிப்புரை :

1, அலகிலா-அளவில்லாத, அகிலம்—உலகம், ஞாயிறு-சூரியன், ஒப்புமை-உபமானம், அனைநாடு-தாய்நாடு நவிலரு-சொல்லுதற்கு அரிய, ஆர்ந்த—பொருந்திய.

2. சால்—மிகுந்த, குருதி—இரத்தம், மும்மை—மூன்று, கேசரி—இருண்ட மஞ்சள் வண்ணம், வருடி—தடவி, அஞ்சலி—வணக்கம்.

3. நிரந்தரம்—எப்போதும், நிலவிட—விளங்க, சேய்-பிள்ளை.

4. உவகை-மகிழ்ச்சி, தோகை—மயில், ஆகம்-உடல், வாகை-வெற்றி, வயங்கிடும்—விளங்கிடும்.

5. தகைவு-அழிவு, தரணி-பூமி, ஏத்திட-துதிக்க, எழிற்கொடி—அழகிய கொடி.

## IV. கதைப் பகுதி

### 1. சிங்கத்தைப் பிழைப்பித்துச் செத்த கதை

துளசா புரத்தில் நால்வரொரு தொடர்பாய்க்
கல்வி பயின்றூர்கள் ;
வளமா ரவரி னொருமூவர் மந்தி ரத்தின் மிக்கமையால்,
தளமா ரரசன் தனைக்கண்டு தங்கள் வித்தைத் திறங்காட்டி
ஒளியார் தனங்கள் மிகவீட்டற் குன்னித் தம்முட் கூறுவார்: 1

'இவன்றான் மிக்க கல்வியிலன் எனினும் நம்மோ டிருந்துபடித்
தவன்ஆ தலின் நாம்ஒருபங்கு தருவோம்' என்றங் குடன்
அழைத்துப்
புவியாள் அரச னிடைப்போகும் போதி லந்த வழியினிடைச்
சவமாஞ் சிங்கந் தனைக்கண்டு தம்மந் திரஞ்சோ
திக்கவெண்ணி 2

'கற்ற வித்தை யாற்செத்த கண்டீ ரவத்தை யெழுப்புவேன்
மற்றை யவர்க்குச் சம்மதமோ?' என்ன மந்தி ரந்தெரியா(து)
உற்ற வொருவன், 'எழுப்பிலது கொல்லும்,' என்ன
வுரைத்திடலும்
பற்றி யவனைத் தள்ள,அவன் பயந்தோர் மரத்தி லேறினன். 3

எழுப்பி னர்பின் பதுகொல்ல இறந்தா ரம்மூ வரும்;இதனல்
இழுக்கி லாத கல்வியினு மறிவே பெரிதென் றிசைத்திடுவர்;
முழுக்கக் கற்றும் உலகறிவில் மூடர் உறவால் தீதுண்டாம்
விழுப்பம் வாய்ந்த உலகறிவே வித்தைக் குயிரென்
றெண்ணுகவே. 4

குறிப்புரை :

1. ஒரு தொடர்பாய்-ஒரு சாலை மாணவராய், வளபார்—வளம் பொருந்திய, தளமார்-சேனை பொருந்திய, திறம்-பெருமை, ஒளி யார்—பிரகாசம் பொருந்திய, தனம்—செல்வம், மிக வீட்டற்குன்னி—(மிக ஈட்டற்கு உன்னி) மிகுதியாகச் சேர்க்க எண்ணி.

2. புவியாள்-பூமியை ஆட்சிபுரிகின்ற, சவம்—பிணம், சோதிக்க—பரிசோதிக்க.

3. கண்டீரவம்-சிங்கம், தெரியாதுற்ற—தெரியாமலிருந்த, பற்றி-பிடித்து.

4. இழுக்கிலாத - (இழுக்கு + இல்லாத) குற்றமில்லாத, இசைத்திடலும்-கூறிய உடனே.

## 2. கழுதை இடருற்ற கதை

பரிதி தரனிவ் வாறுரைக்கப் பைம்பொன் பெற்றோன்,
'இசைபாடி
ஒருபுன் கழுதைக் குற்றதுபோ லுனக்கிவ் விடர்தா
னுற்றதெ'னத்
'தெரிய அதுகூ றெ'றன்ன,'நெடுஞ் செவிய னென்னு
மொருகழுதை
பொருவில் சுமதி நரியினொடு புலத்திற் பயிர்மேய்ந்
துறுநாளில்

'மேவு மொருநாள் விலாப்புடைகள் வீங்க மேய்ந்து
தேக்கெறிந்து
தாவில் கழுதை, 'நிலவெறிக்குந் தண்ணார் இரவி
னிற்பொழுது
போவ தற்குச் சங்கீதம் புகல்வே னீகேள்,' எனநரியும்,
'ஏவு முனது குரல்கேட்டாற் கொல்வார் பயிர்காத்
திடுவோரே' 2

என்று சொல்லக் கேளாமல் இராகம் பாடக் குரல்கேட்டே
ஒன்று கழுதை யெனவுழவ ருடம்பு நுறுங்கப் புடைத்திட்டார்.
அன்று நரிதான்,' 'மாமா!'என் பேச்சைக் கேளா அகந்தையினால்
இன்று பட்டாய்' எனவேசிற் றென்றான் பொன்பெற்
றவன்றானே. 3

—வீரமார்த்தாண்ட தேவர்

குறிப்புரை :

1. இசைபாடி—சங்கீதம் பாடி, புன் கழுதை—அற்பக் கழுதை, உற்றது—நேர்ந்தது, பொருவில்—ஒப்பில்லாத, சுமதி—நற்புத்தியுள்ள, புலம்—வயல்.

2. மேவும்—பொருந்தும், புடைகள்—பக்கங்கள், வீங்க-பருக்க, தேக்கெறிந்து—ஏப்பம் விட்டு, தண் ஆர் இரவினில்-குளிர்ச்சி பொருந்திய இரவிலே.

3. உழவர்-பயிரிடுபவர், அகந்தை—கருவம், பட்டாய்-அனுபவித்தாய், ஏசிற்று—கேலி செய்தது.

---

## இந்நூலில் வந்துள்ள புதிய சொற்கள்

---

### பாடம் 1

திரை, நித்தம், குமரி, மாலவன், குன்றம், மண்டி, சாத்திரம், மணம், பார், வான்புகழ், அள்ளும், மணி, ஆரம், விண்தலை, வெற்பு, சமர், இருள், கலிங்கம், பார்த்திவர்.

### பாடம் 2

தொன்மை, பரப்பு, பேரரசு, மாவட்டம், அடர்ந்த, வேழம், வழக்கு, திணை, அகில், மாநகர், காவியம், நூற்றுவர், சோறு, பொறித்த, சின்னம், மடை, சோணாடு, நன்னாடு, கோநகர், கடற்றுறை, ஈடு, எடுப்பு, எழில், ஆத்தி, வாய்ப்பு, கொற்கை, குளித்தல், புகழ்மொழி, கூடல், செரு, கயல், அடையாளம், பெருநாடு.

### பாடம் 3

அந்தமாய், வீற்றிரு, ஆற்றல், இனிமை, உயிர்நிலை, இயங்கிடும், தரம், செம்மொழி, தனி, இலகு, ஈன்றது, யாப்பு, அணி, அலகில், மொழியில், புராரி, துதியார், கன்னி, தண்டமிழ், இன்புறு.

### பாடம் 4

பாஷை, புலன், சாதனம், குணகடல், குடகடல், நூல்கள், ஏறத்தாழ, அறிஞர், மூழ்கி, பன்னிருவர், ஒருவாறு, இனத்தவர், சமயத்தவர், புலவர், பெண்பால், கிடைத்தில, செல்லு, இரையானது, காதை, பிரபந்தம், முயல்.

### பாடம் 5

நற்குடும்பம், சுல்தான், அவை, அமர்த்து, மாளிகை, நஹார், கால்வழி, புதல்வர், மோத்தி, நீதி வாதம், திரட்டினர், மகவு, அமைச்சர், ஜவாஹர், வழக்கறிஞர், குடி கொண்டது, சொற்பொழிவு, நட்பு, சீடர், நிரம்பியவர், உணர்வு, தியாகம், திடம், பதிவிரதை, சூட்டப்பட்டது, பொருட்படுத்து, ஆவி, ஈடுபட்டு, சிறை, அல்லல், இயக்கம், மாண்டார், மருகி, ஊர்வலம், பாக்கியம், படிப்பினை, இயற்கை.

### பாடம் 6

வியாபித்தல், பீடபூமி, விளிம்பு, கிரி, சிகரம், சூழ்ந்து, வாசஸ்தலம், தணிந்து, அதிகாரி, செல்வர், பழங்குடி, சந்ததி,

மேய்த்தல், சரிவு, தைலம், குடிசைத்தொழில், உச்சி, சாலை, ஊர்தி, கவர்தல், அருவி, வற்றுதல், களிக்க, வருணி, இயலாது.

## பாடம் 7

அரண்மனை, பாவலர், பரிசு, காவலன், ஒப்பற்ற, பாணர், ஐயமற, சுவை, இருங்கள், அளிக்கின்றது, பேறு, ஆசி, நலம், தொலைவு, களைப்பு, தாழ்த்து, நீட்டிக்காமல், புகட்ட, வலி, படை, ஒப்பிட்டு, பீடம், தொடுக்க, நிறைவேற்று, ஆவல், சுற்றம், நேர்த்தி, பீலி, அடாது.

## பாடம் 8

சீமை, சொரிந்தது, பொய்கை, ஏகம், வெள்ளம், தருக்கள், தளிர்த்தன, பூத்தது, வழிந்தன.

## பாடம் 10

சிற்றுண்டி, சிறுமி, புரட்டி, தொடங்கு, தினத்தாள், சம்பந்தம், விளம்பரம், பக்ஷம், திரைப்படம்.

## பாடம் 11

விழா, வெற்றிகரமாக, நடந்தேறியது, அன்பர், சிரத்தை, மகத்தான, சம்பவம், காட்சிச்சாலை, கலை, மாண்பு, ஜயக்கொடி, நிகரற்ற, நாகரிகம், சேவை, பாராட்டினர், திரண்டு, உற்சாகம், சாரும், அலங்கரி, கம்பீரம், சுவடி, பவனி, வரவேற்று, பிரசங்கம், பித்து, ஆணவம், எள்ளளவும், மாறுக, ஹாஸ்யம், வினயம், ஓவியம், இலக்கியம், பழி, விரித்து, இயல்பு, அறம், ஊன்றி, ஒன்றி, முதிர்ச்சி, உபதேசி, ஜடநாகரிகம், மூழ்கி, எளியார், வலியார், சுரண்டி, இலட்சியம், பேய், கள்ளவியாபாரம், சுதந்தரம், தழைக்க, சமத்துவம், உதிக்கும், ஜனநாயகம்.

## பாடம் 12

இதிகாசம், வரலாறு, பாரதம், கௌரவர், பாண்டவர், சச்சரவு, தழுவி, பருவம், நயம், ஓசை, பயின்று, பாக்கள், வாது, விருது, தாயபாகம், விசாரித்து, இணங்கி, பங்காளிகள், கிளையோடு, மனமொத்து, வழங்கி, செருக்கு, அறுத்து, ஒப்பந்தம், வாழ்நாள், வீணாக்காது, தூஷணை, நல்லுரை, வைணவர், பயின்று.

## பாடம் 13

தவப்புதல்வர், முதுபெரும் புலவர், ஒளி, இரார், திண்ணம், தவப்பயன், தோன்றினர், பருத்து, பொதுக்கன், உழுந்து,

முடங்கின, மல்லர், பந்தயம், பொழுதுபோக்கு, உப்புக் குந்தம், நிகரற்றவர், பயில, இடையூறு, ஞாயிறு, பாதிரிமார், விவிலிய நூல், சித்தாந்தம், கட்டுப்பாடு, மீறு, துரோகி, இகழ்தல், பொருட்படுத்து, கொள்கை, தொண்டு, மூடப்பழக்கம், பொதுமை, சன்மார்க்கம், போதகர், பணி, பேராசிரியர், விலகினர், சிலம்பம், மருத்துவர், மேற்கொண்டார், ஊட்டினர், மெய்ப்பித்தார், உரைநடை, துறை, வாயிலாக, அளவிட்டு, இயலாது, தலைப்பட்டார்.

## பாடம் 14

பணிவுடன், நகரம், வாக்கெடுப்பு, கேட்டுணர, முடிவு, சான்று, வசதி, மருத்துவச்சாலை, வறிஞர், நிபுணர், நூல் நிலையம், துணைபுரிவன, அலுவலகம், தூய, இசை, அடுக்கிச் சொல், செயற்கை, சுவாசி, வலிமை, குன்றி, தீமை, சிற்றுரை, ஒன்றி, உள்ளம்.

## பாடம் 16

சமகாலம், அரசவை, ஒருங்கு, ஏறத்தாழ, அரியணை, அமைச்சர், கொற்கை, செழியன், புரவி, மாரி, ஒளி, நிகர், கருத்து, அவதாரம், குலம், சமணர், அணுகு, சீதனம், ஈந்தார், சினமுற்றாள், தணிவிக்க, சினம், நயம், இசையும்படி, வெண்பா, வேம்பு, ஒப்பாகாது, செய்யுள்.

## பாடம் 17

முயன்றேன், ஒழுங்காக, அமையவில்லை, காரணம், இடைப் பகுதி, கடைப் பகுதி, பத்தி, நிகழ்ச்சி, வாக்கியம், காகம், புகழ் தல், ஏமாறுமல், அமையும், இரை, சமயம், தந்திரம், அபகரி, தற்பெருமை, கத்தியது.

## பாடம் 18

அலுத்த, உவகை, சமயம், வெப்பம், எரி, பறை, திங்கள், வெள்ளையடி, மனை, தருணம், கொப்பி, உரையாடு, போகி, வருணன், பண்டு, இன்றியமையாதவை, தெய்வம், முழுகுவர், படையல், செம்மண், மாக்கோலம், முற்றம், புறம், சாணம், அறுகம் புல், பறங்கிக்காய், பள்ளம், கொம்மை, பொங்கல், கூவுவர், படைப்பர், வண்ணம், சதங்கை, சிறுமியர், உறவினர், முதலாளி.

## பாடம் 19

மங்கலம், மனை, குழைத்து, மெழுகி, சிந்தூரம், கோலம், வரிசைகொள, இச்சை, அகில், பகவன், போற்றி, தரளம், அமுதம், வேளை, குரவை, வலம்.

## பாடம் 20

கடிதம், பதில், ஆவல், கிழித்தெறிந்து, எழுதுகோல், முகவரி, அஞ்சல் நிலையம், பேட்டை, காற்புள்ளி, முற்றுப் புள்ளி, அன்புள்ள, விரும்பு, தேர்வு, காலாண்டு, மதிப்பெண், உறை, தபாற்பெட்டி, நெடுங்காலம்.

## பாடம் 21

கழகம், அழைப்பு, மாதிரி, மண்டபம், கடமை, கோரும், செயலாளன், வாணிகம், பட்டி, பதிப்பகம், விண்ணப்பம், தாழ்மை, பரீட்சை, அரசாங்கம், பாட்டனுர், பேற்றை, மனச் சாட்சி, பணிவுள்ள, கட்டாயம்.

## பாடம் 22

ஆசாரியர், அவிவேகம், சிரமேல், அணுகி, தருணம், மட்டி, மடயன், பேதை, மிலேச்சன், மூடன், சீடர், ஐவர், நித்திரை, சோதி, கொள்ளிக்கட்டை, தோய்த்தான், சுரீ ரென்று, புகைந்தது, பதைத்து, அலறி, குளறி, சீறி, இரைந் தெழுந்து, கொல்ல, கிருபை, அதிசயம், மூர்ச்சித்து, தெளிந்து, சங்கற்பம், கண்ணுறங்கு, களிப்போடு, கிட்டாது, பரபரப்பு, அபாயம், கணநேரம், தாமதியாமல், மும்முறை, வழிப்போக் கன், பிரயாசை, வல்லவன், வெகுமதி, அரைக்கணம், பணம், குனிந்து, இசைந்தார்கள்.

## பாடம் 23

ரிப்போர்ட்டர், வாழ்க்கை, கருத்து, ஜனதிபதி, தேர்தல், பாக்கியம், ஞானம், வரட்சி, முணுமுணு, பெயர்ந்து, பத்தி யுள்ள, ஆக்கியது, புரட்சி, பத்திரம், நாணயம், பொறித்து, அடிப்படை, சாசனம், வரைந்தார், புறக்கணிக்க, தீர்மானம், வல்லமை, இரக்கம், அமைதி, அறம், குறிக்கோள், குழப்பம், மதம், குடியரசு, நம்பிக்கை, ஆக்கம்.

## பாடம் 24

கட்டுரை, வியாசம், வரிசைப்படுத்து, மட்டை, மணற் பாங்கு, உப்பங்காற்று, கீற்று, வேய்தல், கொப்பறை, பாளை, சீவி.

## பாடம் 25

ஆற்று, மகவு, புலம், ஏந்து, உதிர்ப்ப, கவண், மல்யுத்தம், கொதிக்கும், நொய், பாணி, அபிநயி, ஒக்கல், தரணி, சொற்றல்.

### பாடம் 26

பெருநாட்டம், அவா, ஈழம், மண்டலம், புறங்காட்டி, பேராண்மை, பிரதிநிதி, நியமித்தான். தேவதானம், மெய்யடியார், பதிகம், திருப்பணி, கோள், எஞ்சியவை.

### பாடம் 28

மாந்தர், மறை, சுரப்பது, தெள்ளிதில், புலனுகும், புறங்கடை, கவல், ஊங்கு, அளவளாவ, நயம்.

### பாடம் 29

சுவடிச்சாலை, சர்வகலாசாலை, கவிதை, இல்லம், கோலமுறும், செய்தித்தாள், குவிந்து.

### பாடம் 30

காவியம், ஈடுபாடு, பெயர்த்தெழுது, அகராதி, நிகண்டு, வேதியர், தொன்னூல், நீத்தார்.

### பாடம் 31

கண்டம், இடையூறு, இறங்கு, மரக்கலம், பிரயாணம், தீவு, உட்பகுதி, பூர்வீகம், விலங்கு, கிளிஞ்சல், பின்னல், தோகை, இறைச்சி, தின்பர், சோழி, நாணயம், கூடாரம், சாரார், புட்கள், தூண்டில், வல்லவர், நீர்நிலை, இயலும், சுருங்கி.



# VEERA PANDIAN TAMIL VACHAKAM

**V STANDARD**


BY

**RAJAMBAL GOVINDARAJAN, M.A., L.T.**

Edited by

**Vidwan: M. V. VENUGOPALA PILLAI**

**T. S. UMAPATHY, M.A., L.T.**





ASSOCIATION PUBLISHING HOUSE

MADRAS-1

**1952**

*[Price Re. 0-10-0*

WRAPPER PRINTED AT SHANTI PRESS, MADRAS-1